உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சுவாமிநாதன் பிள்ளைத்தமிழ்

**காப்பு**

பூமேவு கற்பகப் பொழினிழலி லமர்கின்ற
புலவர்குழு மகிழநன்பால்
புணரியை மதித்தமுது தருபசிய முகிலும்
புகழ்ந்துபா ராட்டஞானப்
பாமேவு திருமுறைக ளெனுமமுத மொண்டமிழ்ப்
பண்ணவர்க ளுண்மகிழஇப்
பார்மீது திருநாரை யூர்நம்பி தருமாறு
பண்ணுபக வற்றுதிப்பாம்;
தேமேவு கொன்றைமண நாறுசுர நதிநீர்த்
திளைத்தாடு காலையுடனே
சேர்ந்துதன் வெண்கோடு கழுவித் துதிக்கைமேற்
சென்றுமத் தகமமர்ந்து
தாமேவு உடன்பிறப் பின்பமரு மாடல்புரி
தம்பியைச் செம்பொருளைமுன்
தந்தையுள் குளிரமொழி சாமிமலை முருகனைச்
சாற்றுபைந் தமிழ்தழையவே.

**திருமால்**

ஏர்மருவு பைந்தினைக் காவல்புரி மான்மகளின்
இலவுவாய் மொழியமுதினுக்
கேக்கற்று நிற்கின்ற இயல்பினும், பத்தியினில்
எப்போது மொப்போதரும்
சீர்மருவு மருணகிரி வாய்மலர்ந் தருள்புதிய
தெய்வத் தமிழ்ச்சந்தமார்
செம்பாவை மிகவிழைந் துளமுருகு குருமலைச்
செவ்வேளை யினிதுகாக்க;
தேர்மருவு செம்பருதி ஒளிமட்கு குருமணி
திரைக்கைக ளாலளிக்கும்
தீம்பாலி னுததிதரு செல்வத் திருப்பாவை
சேர்த்தியிற் கீர்த்தியின்மிகும்

பார்மருவு புதுவையிற் பட்டர் பிரான்தவப்
பயனா யுதித்தகோதை
பாடியரு ளுந்திருப் பாவையால் மகிழ்கின்ற
பதுமமலர் பசியமுகிலே.

### சிவபெருமான் - அம்பலக்கூத்தன்

தாமரைத் தவிசிலமர் மாமறைக் குரிசில்தழை
யாலிடத் துயில்கரிய மேகமிப் புவனமொரு
தானழித் திடுமுனைய சூலம் வைத் தவனுமிவர்
சேமமுற் றிடவொருகை மேவுடுக் கையரபய
மேவுபொற் கையினரெரி சேர்தடக் கையர்கருணை
சேருமற் புதநடன மாடுபொற் கழல்பணிவம்;
பூமனைச் சிறையிலிடு கோபன்முத் தொழிலுமொரு
தாடைத் திடு சதுரன் வேதமெய்ப் பொருள் சருவ
பூரணப் பிரமமுமை யாள்தவச் சிறுவனுயர்
ஏமசற் குருவின்முறை வாழ்வுறச் சிவனைமுனம்
ஓதுவித் தவனெடிய சோலைசுற் றிலகுதிரு
வேரகக் குமரன்மகிழ் காவலுக் கருள்கெனவே. 3

### சிவகாமசுந்தரி

ஐந்தொழி னடாத்துதிறல் சிவபரம் பொருள்பெற
அளிக்கவென் றேயருளினால்
ஆதியிச் சை கிரியை யாகியுடல் தனுகரணம்
ஆதியவெ லாமுதவியே
சிந்தையி னுணர்ந்திடற் கரிய இறை திருநடம்
சிற்றுயிர்கள் காணொணாத
சிறுமைகண் டவையுயத் தான்கண்டு கருணைபுரி
சிவகாமி யடிகணினைவாம்;
முந்தைமறை யோதுசுப் பிரமணிய மாகியரன்
முளரிவிழி வழியுதித்தே
முக்கண ருவக்கவுப தேசமிரு செவிகுளிர
மொழியுங் குமாரகுருவைக்
கொந்தவிழ் நறுங்கா விரிக்கும் புனற்கா
விரிக்குவட பாற்குவலயம்
குலவமரர் பணிபுரிய அருள்செயுங் குருமலைக்
குகனைப் புரக்கவெனவே. 4

**விநாயகர்**

முன்னேரில் மகதியாழ் முனிகொண்டு வந்தகனி
முக்கணரை வலம்வந்துதான்
முழுதும் கவர்ந்தகுறை தீருமா றம்முனிவன்
முன்கண்டு வந்தமலைவாழ்
தன்னே ரிலாத திரு மாதுளங் கனியினிய
தம்பியை வலிந்தணையுமா
தந்தருள இருதந்த மொழுகுமத மூன்றினொடு
சார்களிற் றைத்துதிப்பாம்;
கன்னேரு மெனையனையர் மனமும் கரைந்துகக்
கருணைபுரி விரதவேளைக்
கனகமலை வளருமர கதவல்லி கனியருட்
கற்பகக் கனியையினிய
மின்னேரு மிடையமர குஞ்சரி தடங்கொங்கை
வெற்பில்விளை யாடுகளிறை
மேதக்க புலவர்புகழ் சாமிமலை மேவுதமிழ்
விரகனைக் காக்கவென்றே. 5

**வீரபத்திரர்**

விதிவழியி னுழலுயிர்கள் கதியடைய விமலனருள்
வேதவிதி மாறிமேற்கொள்
வேள்வியினில் விதியை விதி மாலினுக் கேயவி
விதிப்பனென் றேமுனைந்த
விதியின்வழி கெடுமதிகொள் சிறுவிதியை அவ்வரி
விதிர்ப்பத் தடிந்துமேவு
விபுதரனை வோர்மெய்யு மொவ்வோர் வடுக்கொள
விதித்த வீ ரனைநினைகுவாம்;
பதியுமவன் வழியொழுகு பசுவுமவை பிணிநெடும்
பாசமும் பொய்யென்றுதான்
பரமமெனு மவநெறி பிடித்துக் கொடுந்தொழில்
பயின்றசூர் படநெடியவேல்
முதியவுத தியுமலற மலைபிளவு படவெறியு
முருகனைக் குருகிரியில்வாழ்
முதல்வனைக் கவுமாரி புதல்வனைப் புனிதவறு
முகவனைக் காக்கவெனவே. 6

பயிரவர்

ஆக்குந் தொழிலா னகங்காரம் அடைந்த
மலரோ னுயர்முடிகள்
அஞ்சில் ஒன்றை ஏனையவை அஞ்சி
யலறக் கிள்ளியதில்
காக்குந் தொழிலோ னுதலுதிரம் கக்க
ஏற்று நிறையாமை
கண்டு நகைத்த வடுகனிரு கழற்றா
மரைகள் கைதொழுவாம்;
வாக்கு முதல்வி மகிழ்நனரு மறையின்
கொழுந்தின் பொருளறியா
மையினாற் குட்டி யருஞ்சிறையில் வைத்த
மலர்க்கை முருகோனைத்
தேக்கு மகிழ்ச்சி கொளக்குருவாய்ச் சிவனார்க்
கருளும் சிறியபெருந்
தேவர் பெருமான் சாமிமலைச் செவ்வேள்
பெருமான் றனைக்காக்க. 7

திருநந்தி தேவர்

ஓராலி னிருநீழல் முன்னாளி னால்வருக்
குற்றபே ரையமறுமா
றொளிநெறி யுளத்திலெழு மொண்கருணை யானன்
குரைத்த குரு முதல்வனருளும்
சீராக மப்பெரும் பொருளான சிவஞான
போதநெறி மேதினியின்மேல்
திகழவருள் புரிகுரவர் முதல்வனெம தருணந்தி
திருவடிகள் வழிபடுகுவாம்;
பாராதி பூதங்க ளொன்றுமறி யாத்தனிப்
பரவீட்டில் உரையுணர்வறப்
பாடுதிரு வருணகிரி வாழவருள் பரமகுரு
பரனைப் பசும்பொன்மணிகள்
தாராள மாகஎறி காவிரியின் வடகரைச்
சகலவள மொடுகுலாவும்
சாமிமலை மேவுசிவ காமிமகிழ் பாலனைத்
தளராது காக்குமாறே. 8

### திருவாறெழுத்து

இருமூன்றெய் தியஇயல்பு பிறழாது முத்தீ
யெனுஞ்செல்வ மோம்பு மியல்பார்
இருவரைச் சுட்டுபல் வேறுகுடி யாரகவை
இருபத்து நான்கிரட்டி
அருநான்கு மறைநெறி பயின்றபே ரந்தணர்கள்
அரியநறு மலர்கள்தூவி
அன்போடு தொழவுகந் தேரகத் தமர்கின்ற
ஆறுமுக னைக்காக்கவே;
பெருமூன்று துயருமடி யாரையணு காவகை
பேணும் பெருங்காவலாய்ப்
பிறவியலை வாரிக்கொர் புணையாகி நவில்தொறும்
பேரின்ப அமுதருள்வதாய்
உருமூன்று மாகியவை யல்லாத திருமுருகன்
உயர்திருப் பெயருமாகி
உய்யஅடி யேனுக்கும் ஐயனெங் குருசாது
வோதுதிரு வாறெழுத்தே. 9

### திருநீறு

எங்கள் பெருமான் சம்பந்தன் எண்ணா யிரவர் சமணர்கழு
ஏறவாது செயுங்காலை இயம்பும் பதிகச் சிறப்பினதாய்
அங்க ணாவுக் கரசர்நீ றணியா வூர் கா டாகுமென
அறைந்த பெருமைத் தாய்நீறில் லாதநெற்றி பாழென்னத்
தங்கு புகழ்சே ரவ்வைசொலுந் தகைமைத் தாய்நான் மறையின்முடி
தாழ்வில் மிருதி புராணங்கள் சாற்றும் பெருமை பலவுடைத்தாய்ச்
செங்கண் ஏற்றர் திருமேனித் திகழும் பூச்சாந் திருநீறு
திருவே ரகத்துக் குமரனுதல் சேர்ந்து காக்கப் பரவுதுமே. 10

### உருத்திராக்கம்

மன்னுயிர்கள் துன்னுமல மாயைகரு மங்கள்புரி
வலியினாற் பிறவி நோயின்
மாழ்குபெரு வாதைகண் டருளினாற் பவநோய்
வயித்தியன் தரு பற்ப மீது
என்னுமொளி நீறுமந் திரவா றெழுத்தோ
டியைந்தமணி யாகியெங்கள்
இறைவனருள் விழியின்வந் தடியர்திரு மேனிபுனை
எழிலக்க மணி புரக்க

மின்னுமணி மகுடஇமை யோர்படு மிடுக்கணுறு
மிடியெலாம் பொடி யாகவே
விமலநுதல் வழிவந்து சரவணம் வளர்ந்தம்மை
விழியின்மணி யான முருகைப்
பன்னுமறை பரவுசுப் பிரமணியை யேரகப்
பதியிலமர் ஞான மணியைப்
பழனிமலை வாய்பரங் குன்றுபழ முதிர்சோலை
பலமலையி லமர் மணியையே. 11

### தமிழ்த் தெய்வம்

உலகினொ டுதித்ததென் றைக்கு நில வுவதொழுங்(கு)
உற்றவியல் பினையுடைத்தாய்
ஓதுதற் கெளிதாகி நல்லநா கரிகர்பயில்
உயர்வுடைத்தாய் உலகில்வாழ்
பலவகைய மாந்தர்க்கு முரிய பொது மறையைப்
படைத்தசீர்த் தாகிமுக்கண்
பகவனெடு மால்சத்தி கணபதி குமாரவேள்
பண்ணவர்கள் பிறரு நச்சக்
குலவுகவி மாலைபல மணமுடைய தாய்முதலை
கொண்டமத லையையழைத்தல்
கொடியவிட மமுதுசெயல் முதலரிய செயல்செய்புகழ்
கொண்டதாம் செந்தமிழ்த் தே(வு)
இலகுதமி ழால் வைத பேருக்கு மருள்வனடி
யிணைபாடி யடியவர்வாழ
இனியதமிழ் அருள்கருணை முருகனுயர் குருமலையி
னுறுகுமர னைக்காக்கவே.

### 2. செங்கீரைப் பருவம்

ஐவகை யெனும்பூத மாதியை வகுத்ததனுள்
அசரசர பேதமான
யாவையும் வகுத்து மறை யாதியும் வகுத்தனைஎம்
ஐயமற் றவையோதவோ
கைவரு கலைத்திறன் எமக்கிலை வருந்தியே
கற்பினும் கடனீரினைக்
காதலிற் பருகினீ வேட்கைதணி யாதவர்
கணக்காகி நின்றதன்றோ

உய்வகை எமக்கருள ஒருமொழி உரைப்பையேல்
ஓதியுண ராதஞானம்
ஒருநொடியி லெய்தியுயர் கதிபெறுவ மாதலால்
உள்ளுருகி வேண்டுகின்றோம்
தெய்வமறை முடிவான அநுபூதி யுறவினிதோர்
செங்கீரை யாடியருளே
திருமருவு குருமலையி லமரினிய தமிழ்முருக
செங்கீரை யாடியருளே.

அவஞான நெறிகள்நவ நவமாக அறைகின்ற
அறிஞர்மலி கலியுலகிலே
அவர்கள்மொழி தவறுநெறி எமதுளத் தேறுமோ
அரியேறு புல்தின்னுமோ
தவஞான நெறி பயில கிற்றிலே மாயினும்
சால்பிலா நெறியி னுழையேம்
சரியைகிரி யாதியிக ழேமுனடி யாரடியர்
சார்பை யொரு காலுமிகழேம்
உவமான மில்லாத பரதெய்வமே மறைகள்
ஓதும் பரப்பிரமமே
உயராக மத்தின்முடி வாகமெய் கண்டமுனி
உலகுய்ய வாய்மலர்ந்த
சிவஞான போதமுறை யநுபூதி கைவரவொர்
செங்கீரை யாடியருளே
திருமருவு குருமலையி லமரினிய தமிழ்முருக
செங்கீரை யாடியருளே.

புடவியணி மணிகளணி கரைகுலவு புடவையாம்
பொங்கோத முழுதருந்தும்
பொதியமுனி புனித சத தளமுளரி குடிகொளும்
போதன்முப் புரமுமெரியத்
தடவரையொர் கொடுமர மெனக்கொண்ட தாணுஇவர்
தா முவப்பப் பிரணவத்
தனிமறையி னரியபொருள் செவிகுளிர வுரைசெய்குரு
சாமிநா தக்குழந்தாய்
மடமகளிர் நெடியமனை சுடுபொன்மணி சுவை யடிசில்
மலரமளி முத லவாவி

மலர்தலைய உலகிலலை மனதுகுவி வுற வுரையில்
மவுனநிலை யினிதுபெறவே
திடமுனிவர் மறையின்மொழி கொடு பரவு குமரவொரு
செங்கீரை யாடியருளே
திருமருவு குருமலையி லமரினிய தமிழ்முருக
செங்கீரை யாடியருளே. 15

பொங்கமுத வுததிநுகர் பைங்குதலை மதலையருள்
புனிதவுப தேசநெறியாற்
புனித அத் துவிதநெறி கைவந்த மேன்மையாற்
போர்க்களத் தர்ச்சுனற்குத்
தங்குபல பேரண்ட வடிவாய நிலையினைத்
தரிசனம் செய்யவருளித்
தஞ்சமென அஞ்சே லெனப்புகன் றருள்புரி
தடங்கண்மால் மருக மாயா
வெங்கள மிதிற் புலப் பகைநடு இருந்தஞ்சு
வேமையஞ் சேலெனுஞ்சொல்
விளம்பியருள் புரிதல்முறை யாகும்நீ பாணிக்கில்
வேறுதுணை யேதுமறியோம்
திங்கண்முடி யார் சருவ மங்களை தருங்குமர
செங்கீரை யாடியருளே
திருமருவு குருமலையி லமரினிய தமிழ்முருக
செங்கீரை யாடியருளே. 16

பலாவினிய மாநெடு விளாவிரைய வாரமகில்
பாவுநிழல் சேரசோகம்
பராரைமுதிர் சேகணி மராகுரவ நீடுவளர்
பைம்புனங் காவ லோவா
நிலாநுதலி வேல்விழியி னாள் குறமி னாள்திருமுன்
நின்றே கரங்குவித்தே
நினாதடிய னான்உயவொ ரேவல்கொள வேணுமென
நின்றே மயங்கு விடலாய்
கலாதர னரா சுரரு லோகநதி நீளிறகு
கனகிநறு மதலை மத்தம்
கலாவிய சடாடவியர் காதன்மத லாய்உமை
கணுக்கினிய சுப்ரமணியே

சிலாநிரை குலாவிய பராசல குகாவினிதொர்
செங்கீரை யாடியருளே
திருமருவு குருமலையி லமரினிய தமிழ்முருக
செங்கீரை யாடியருளே. 17

பட்டிமை யுந்துய ரஞ்செய் கொடும்படி றும் பட ராமேநீள்
பத்திமை யும்பணி வுந்தயை யும்பயில் பத்தர்ம னக்கோவில்
சட்டம ரும்பத மிட்டொளிர் கிண்கிணி தண்டையும் வெண்டயமும்
சஞ்சரி கம்புரை யுங் குரல் கொண்ட சதங்கையு நன்காட
மட்டறு பேரொளி விட்டில குடைமணி வடமும சைந்தாட
மார்பணி வனவள பவளமொ டு தரள வடமும சைந்தாட
அட்டமி மதிநுதல் நிலவொளி வீசிட ஆடுக செங்கீரை
ஆரண ஒண்பொரு ளேரக மாமுரு காடுக செங்கீரை. 18

பொங்கோ தந்துயில் கின்றோ னும்புவ னந்தா னன்றீனும்
பொன்றா தின்கம லஞ்சே ரெண்கண னுங்கா வின்கோவும்
எங்கோ வெந்துய ரந்தீ ரென்றுபு லம்பா நின்றோத
இந்தா வென்றுகொ டுஞ்சூர் கொன்ற இருஞ்சீர் கொண்டோனே
கொங்கோ டொன்றிய வண்கா விண்பயில் செங்கோ டுந்தேவர்
கும்பார் வஞ்செய் பரங்கோ டுங்குடி கொண்டா ளுஞ்சேயே
செங்கோ வென்பெயர் தங்கேர் பொங்கிறை செங்கோ செங்கீரை
தென்பா லொண் குரு வின்கோ நின்றவ செங்கோ செங்கீரை 19

இந்திர நீல மெனுஞ்சிறு குஞ்சி யிருந்திருள் மஞ்சாட
இலகிய திருநுதல் நவமணி யிழையணி யொளிக ளெழுந்தாட
வெந்தவெ ணீறணி ஒளியா டத் திரு விழியரு ணின்றாட
விலையறி வரியக ணங்குழை காதொளி விலகி யசைந்தாட
செந்துகிர் வாய்பொலி புன்னகை மென்னனை சிறிது மலர்ந்தாடத்
திங்கள் முகங்கதி ரெங்கணும் வீசச் செவிலியர் கொண்டாட
அந்தமு மாதியு மாயப ரம்பொரு ளாடுக செங்கீரை
அருள்மலை குருமலை யமர்சிவ தேசிக னாடுக செங்கீரை.20

தேமருவு மந்தார மாகிய பொலந்தாரு
சேர்பொழி லிருந் தேசிலாத்
தேமொழிய ரின்பாரு தேவரை நலிந்தேபஃ
றீமைசெய் கொடுஞ்சூரபன்

மாமலர் நெடுஞ் சூத மாயெதி ரசைந்தாட
வாரிதியி லன்றேவிய
வாகையயில் வன்றேக மீரஇரு துண்டாகி
மாமயிலு டன்சேவலாய்
நாமுற வருங்காலை வாகனம் விசும்பார்ப
தாகைஎன நின்றாடவே
ஞானவிழி யின்பார்வை யாலருள் புரிந்தேகொள்
நாத முக மைந்தாகினார்
ஆமுருக மஞ்சாரு மாறுமுக இன்பாக
ஆடியருள் செங்கீரையே
ஆதியுமை யின்பால ஏரகமு றுஞ்சாமி
ஆடியருள் செங்கீரையே. 21

இவனலா தொருமுழு முதலிலை யெனவுணர் இளையோன் வயவாகு
இணைபிரி வருநவ வயவர்க ளொடுமியல் விளையா டல் செயேல்வை
தவமக னுடல்குழை வுறுமென நினைசிவை தழுவியென் மதலாய் நீ
தழைபசி யறமுலை நுகருதி எனஅவள் தரவமு துணுபோதே
உவமையி லரனவ னணுகிமு ருகவென ஒண்செங் கைநீள
உடன்அனை மடிநின் றோடித் தாவி யுவந்தே சென்றேறிச்
சிவனகன் மார்பிடை நடமிடு பதயுக செங்கோ செங்கீரை
திருமகள் மருமக குருமலை வளர்குக செங்கோ செங்கீரை.22

கங்கா நதிப்புன லெழுந்தாட அங்கணொரு
கலைமதி யலைந்தாடவே
கமழ்நறுங் கொன்றையந் தொங்கலா டச்சடை
கலைந்துவான் கலவியாடப்
பொங்கா தவன் சோம னங்கியெனும் விழிகளிற்
பொழிகருணை வெள்ளமாடப்
புன்முறுவ னிலவாட எண்டிசையு மசைவுறப்
புயமாட அங்கைமேவு
மங்காத எரியினோ டரிணமா டப்புனையும்
வரியரவ மாடநன்கு
மறைமிழற் றுஞ்சிலம் படியடியி லுறும பசு
மாரனு நெளிந்தாடவே

செங்கோ லெடுத்து மன் றாடியவ ரருள்குமர
செங்கீரை யாடியருளே
திருமருவு குருமலையி லமர்சாமி நாதனே
செங்கீரை யாடியருளே. 23

### 3. தாலப்பருவம்

செந்தா மரையான் மகனாகித் திறல்சேர் தக்கன் சிறுமதியால்
செந்தீ வேள்வித் தகர்தின்ற தேவர் பாவம் தகருறவே
வந்தாண் டமரில் அமரருக்கு வயன மாயா வடுவுறுத்தி
மற்றுந் தீரா மையினாலே மாயை வயிற்றில் வருசூரன்
நந்தா தொறுக்க வரமருளி நலிவித் தசுரன் முன்னாளில்
நாடி வேண்டுந் தவப்பயனை நல்கி யவனுங் கதியுறவே
தந்தார் குமரா இனிச்சிறிது தாலோ தாலோ தாலேலோ
தமிழ்நா யகனே குருமலைவாழ் சாமி நாதா தாலேலோ. 24

ஒருவா ராகி யொருவரா முருவார் சிவனும் சத்தியும்வே
றுற்றே யுஞற்று மாதவத்தா லுடையா னுதற்கண் முளைத்தெழுந்த
பெருவான் சோதி உருவாகிப் பெருகுங் கங்கை யுய்ப்ப வழி
பிரசக் கமலச் சரவணத்திற் பிள்ளை யிருமூன் றாய்வளரக்
கருவா ராமே பெற்றவுமை கண்டு திரட்டக் கந்தனெனக்
கவினு முருகா திசைமுகனைக் கலங்கச் சிறையிட் டுலகமெலாம்
தருவாய் அளிப்பாய் துடைப்பாயாம் சதுரா தாலோ தாலேலோ
தமிழ்நா யகனே குருமலைவாழ் சாமி நாதா தாலேலோ. 25

வீணை முனிசெய் வேள்வியிடை வெகுண்டே
யெழுந்த பெருந் தகர்தான்
விண்ணோர் மண்ணோர் யாவருக்கும் விளைத்த
துயர்கண் டருளாலே
ஏணை வயவா குவையேவி இழுத்தே
வருவித் ததையேறி
எல்லா வுலகும் செலநடத்தி எமக்கோ
ரூர்தி எனக் கொண்டாய்
கோணை யமரர் உனையறியார் கொதித்தே
எதிர்த்த காலையவர்
குறும்பை யடக்கி யுலகுபொதி கோதி
லுருவம் காட்டியவா

சாணை யணுகாச் சவிமணியே தாலோ
தாலோ தாலேலோ
தமிழ்நா யகனே குருமலைவாழ் சாமி
நாதா தாலேலோ. 26

பெரிய பொருளிஃ தென்றுணரான் பிள்ளை எனவே எள்ளியஅப்
பிரமன் திக்கு வாய்குருதி பெருகக் கக்கு வாயாக்கி
அரிய சிறையில் வைத்து வின வால நீழ லறமுரைத்த
அரனுக் கருமா மறைப்பொருளை யருளும் குழந்தைக் குருநாதா
உரிய தவஞ்செய் குறுமுனிக்கு முயர்செந் தமிழாற் பிரமநிலை
உபதே சித்த பெருங்கருணை யுருவா! எமது வினைக்குன்றம்
சரியச் சிதைக்கு மழகளிறே தாலோ தாலோ தாலேலோ
தமிழ்நா யகனே குருமலைவாழ் சாமி நாதா தாலேலோ. 27

சிரித்தே புரத்தை எரித்தபிரான் தேவர் துயரந் தீர்க்கவொரு
சிறுவ னாகி எழுந்த திறந் தேறாத் திறல்சேர் வெஞ்சூரன்
மரித்தே ஒழியா துலகியலை மதித்துத் தேவர் சிறைவிடுத்து
வாழ்க வெனநல் லறிவுரையை வழங்கி வருக எனவருளால்
கரித்தேர் பரிக்கா லாள்மிகுந்த கன்னிப் புரிசை மகேந்திரத்திற்
கடிதிற் செல்ல வயவாகுக் காளை தனையுய்த் தனைநீதி
தரித்தே வாழார் வேர்தறித்தாய் தாலோ தாலோ தாலேலோ
தமிழ்நா யகனே குருமலைவாழ் சாமி நாதா தாலேலோ. 28

செய்ய கமல உந்தியிடைத் திசைமா முகனைச் செனிப்பித்துச்
செகங்கள் படைப்பித் தவையளித்துத் தீய வரக்க குலமுழுதும்
நைய வழித்துத் தேவர்குல நல்வாழ் வுறவே நல்கிவிரி
நரலைத் தரங்கக் கட்டிலின்மேல் ஞாயி றனைய குருமணிசேர்
பைய தலையா யிரநாகப் பாயன் மிசை செம் பாவை பத
பன்மம் வருட மறைகள்புகழ் பாட வுகத்தின் கடைநாளில்
வைய நுகர்ந்து துயில்பெருமான் மருகா தாலோ தாலேலோ
வடிவே லரசே சாமிமலை வாழ்வே தாலோ தாலேலோ. 29

பொங்கு தழலோன் தன்கரங்கள் பொறுக்க கில்லா னாகிநிறை
புனிதப் பாகீ ரதியுய்ப்பப் போற்று மவள்கைத் தலமீதும்
சங்க முரலும் சரவணத்திற் றண்டா மரைப்பூந் தொட்டிலிலும்
தாய்மா ரறுவர் மடிமேலும் சகதாம் பிகைமென் மார்மேலும்

திங்கண் முடியார் தோள்மேலும் திருக்கண் வளரும் சிவக்கொழுந்தே
திருநான் மறையின் பொருளாகித் திகழும் சிவசுப் பிரமணியே
அங்க ணரசே சாமிமலை அவிர்செம் மணியே தாலேலோ
அடியார் பவநோ யகற்றுமருள் அமிர்தே தாலோ தாலேலோ. 30

பொருளொன் றனையுங் காணாமே புதைத்துத்
தன்னைப் புதைக்கறியாப்
புறத்த விருளை வெளுப்பாக்கும் பொல்லா
இருளா ணவத்தினிடைத்
தெருளென் பதுசற் றெனுமின்றிச் செத்துக்
கிடந்த ஆருயிரைச்
சேரு மாயே யங்களினால் சிறிதே
விழிப்பித் தவை முனைந்தே
இருமை வினைக ளியற்றியுறு மின்ப
துன்பநுகர்ந்து சலித்(து)
இயக்கு மாசை யறுகாலை இனிய
சாந்தத் துயிலுறுமா(று)
அருளி னாலே வீட்டுய்க்கு மன்னாய்
தாலோ தாலேலோ
அடியார்க் கெளியாய் சாமிமலை யரசே
தாலோ தாலேலோ. 31

பொலந்தருவி னீழலி னமர்ந்திடு புரந்தரன்
புலோமசை யுடன் கரந்தே
புவிமீதி லுயர் வேணு வடிவா யிருந்தரன்
பொன்னடிகள் பூசிக்குநாள்
நிலந்தனில் வறங்கூர அவன்வைத்த பூஞ்சோலை
நீரின்றி வாடல் கண்டே
நீராழி யுண்ட குறு முனி குண்டி கைக்கணுறு
நீ ரைங் கரன்கவிழ்ப்பச்
சலந்தர முழங்குமுயர் சைய முற் பவி பொன்னி
தவிராது பாய்ந்து தாய்போற்
சாலியுயர் கழைவாழை பூகமுத லியபயிர்
தழைக்கவருள் புனனாடனே
தலந்தனி லுயர்ந்தவள மிகுமேர கக்குமர
தாலேலே தாலேலவே
சைவநா யகசருவ தெய்வநா யகமுருக
தாலேல தாலேலவே. 32

பதுமமென் மலர்வாய் குவிவுறு மதன்வாய்
பயிலளி பொழில்போமே
பறவைக ளுயிர்நேர் துணையொடு மெதிர்பார்
பறழ்தமை யுறலாமே
பொதுவற உலகாள் கதிரவன் விரைவார்
புரவிகள் குடபாலே
பொழில்குல விய நீள் வரையுக இருள்மேல்
பொதிவுறு விதமோராய்
விதுமுக மடவார் விரைமலர் கொடுமா
லையைஎதிர் கொளலானார்
விதிமறை முறையா குதிநிறை வுறவே
தியருன கழ லோர்வார்
சதுர்மறை முடிவா கியமுழு முதலே
தாலோ தாலேலோ
சரவண பவனே குருமலை முருகா
தாலோ தாலேலோ. 33

தவராசர் பெற்றன ளிதியே தாலோ தாலேலோ
தனைநேரு முத்தமிழ் விரகா தாலோ தாலேலோ
பவசா கரத்துறு புணையே தாலோ தாலேலோ
பழமா மறைபயில் பொருளே தாலோ தாலேலோ
உவமான மற்றவிர் ஒளியே தாலோ தாலேலோ
உமையாள் தவத்துறு குமரா தாலோ தாலேலோ
சிவனார் பழிச்சிய குருவே தாலோ தாலேலோ
திருவே ரகப்பதி முருகா தாலோ தாலேலோ. 34

## 4. சப்பாணிப் பருவம்

எண்ணிலா மறைகள்பல ஆகம புராணங்கள்
இதிகாச வகைகள் மேவும்
இருடிக ளியற்றுபல சாத்திர விதங்களும்
இயம்பரிய பெரிய பொருளைத்
தெண்ணிலா முடியர்நாற் றிசையினும் கைகாட்டு
செப்புதற் கரிய முடிபைத்
தெரியமிக இனிதான சந்தத் தமிழ்க்கவிகள்
செப்பிய திறம்பாவலன்

மண்ணில்வாழ் பவருய்ய வருமருண கிரிநாத
வள்ளல்பா மாலைகேட்டு
மாறாது வட்டெழு களிப்பினாற் றாளமிடு
வகைபோற் களங்கமிலவாம்
தண்ணிலா மதியமிரு மூன்றுதித் தனையமுக
சப்பாணி கொட்டியருளே
தாமமிகு சாமிமலை வாழுமுரு கையனே
சப்பாணி கொட்டியருளே. 35

முந்திப்போம் பிறவிபல வற்றிலுனை நினையாமல்
மோசம்போ யினதறித்து
முழுதுமினி யுனதடிமை வழியொழுகு வோமென்று
முன்னிமுயல் தொண்டர் தம்மைப்
பந்திப்போ மெனவுன்னி ஆர்த்தெழுந் துறுகின்ற
பழவினைக ளாம்பறவைகள்
பக்கமணு காதுள் பயந்துதிசை திசையிற்
பறந்துபல மற்றலைந்து
சிந்திப்போம் படிதுரத் திடுகின்ற செயலெனச்
செல்கதிக் குறுதுணையெதும்
தேராது திரிகின்ற பாராரை இங்குநீர்
சேர்கென் றழைத்தல்போலச்
சந்திப்போ தனையசெம் மேனிமுரு கையவொரு
சப்பாணி கொட்டியருளே
தாரகசொ ரூபதிரு வேரக குமாரவொரு
சப்பாணி கொட்டியருளே. 36

இயங்குவன நிற்பனவு மாய்அறி வுடையஅஃ
தில்லாத எனஇரண்டாய்
இவ்வுலகி லுண்மைகண் டும்அறிவி லாதவைகள்
இயமான னலஅறிவினால்
வயங்குவது வேயுயிரஃ துடலொடு கலந்துவினை
வாஞ்சையாற் செய்யும் உயிரில்
வழியுட லியங்காது மண்ணெனவும் அவ்வுயிர்தன்
வயமற்ற தாதல்கண்டும்

சுயங்கிரியை செய்கின்ற வாலறிவ னுண்மையைத்
தோமற வுணர்ந்து பணியாத்
துன்மதியார் புன்மைகண் டச்சோ எனச்சொலித்
தோன்றுசில முறுவல் பூப்பத்
தயங்குகை புடைத்தலொப் பாகமுரு கையவொரு
சப்பாணி கொட்டியருளே
தாரகசொ ரூபதிரு வேரககு மாரவொரு
சப்பாணி கொட்டியருளே. 37

பன்மார்க்க நூலெலாம் பகர்கின்ற பொருள்களும்
பயனுமப் பயனை யடையப்
பயில்கின்ற சாதனைக ளும்படித் தோர்ந்தவைகள்
பயனற்ற வெனவறிந்து
நன்மார்க்கம் யாவையும் தம்மகத் தேகொண்டு
நவிலுமெந் நெறியுமிகலா
நான்மறைக ளாகம விதங்கள்புகல் முப்பொருளை
நவையின்றி ஓர்ந்து பாவத்
துன்மார்க்க நீங்கியற நெறிநின்று புண்ணியத்
தொலையிலாச் செல்வ மீட்டித்
தூயதொண் டின்னிலைமை கைவந் திரண்டற்ற
சுத்தஅத் துவிதநிலைகொள்
சன்மார்க்க சித்திசேர் தொண்டர்குல தெய்வமே
சப்பாணி கொட்டியருளே
தாரகசொ ரூபதிரு வேரக குமாரனே
சப்பாணி கொட்டியருளே. 38

செஞ்சுடர்ப் பருதிசத கோடியொளி கூடினும்
சிறியமின் மினியின் மாழ்கத்
திகழொளி விரிக்கும்வேல் சிந்துமத சிந்தூர
திலககய முகதாரகன்
விஞ்சுசுடர் வீசுதிரு மாலினட லாழிபூண்
வியன்மார்பு பொடிசெய்தவேல்
வீரவா குவினைமுத லானவரை வஞ்சித்த
வெற்பினை இடித்த வடிவேல்

துஞ்சுசிறை யின்கணுறு மிந்திர குமாரனொடு
சுரர்கள்பத முறு தளையெலாம்
துகளாக நொடியினி லராவுமர மானவேல்
தொண்டர்தமை நலிய நினையும்
சஞ்சிதக் கடல்பருகும் வேல்விளங் குங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தாரகசொ ரூபதிரு வேரக குமாரனே
சப்பாணி கொட்டியருளே. 39

அங்கிங்கெ னாதபடி எங்குங் கலந்தணுவு ளணுவாய்
மலைக்கு மலையாய்
அமரும் பரப்பிரம மானவுனை சிலவர்வட
ஆரியர் தெய்வமெனவும்
சங்கங் குலாவிநெடி யோன்குன்று குமரியிடை
தனில்வளர்ந் தோங்கி என்றும்
தன்னிளமை குன்றாத தென்றமிழர் போற்றுந்
தனித்தெய்வ மென்று மறையா(று)
அங்கங்க ளோடுபொலி ஆரியந் தான்நமக்
கரியபெரு மொழியதென்றும்
அழியாம லுலகினிற் பயில்கின்ற தமிழேநம்
அன்னை யெனவும் வாதிடும்
சங்குலங் கணடந்த மடமையை யிழித்தல்போற்
சப்பாணி கொட்டியருளே
சகலருக் குந்தெய்வ மானகுரு மலைமுருக
சப்பாணி கொட்டியருளே. 40

அம்புய மாளிகை வாழ்பிர மாமணி நாவக லாதவளாம்
அலகில கலைமக ளேதமி ழுலகி னருந்தவ நினைவாலே
இம்பரில் வந்தன ளென்றெவ ரும்புக ழும்படி இணைகாணா
இன்றமிழ் நன்கவி தந்தரு ளவ்வை எனும்பெரு மூதாட்டி
உம்பல் முகன்றன தின்னரு ளாலர னுறைகயி லையினுறுவாள்
உண்ண வெணாவலின் விளைசுடு கனிக ளுதிர்த்திடு மாறேறிக்
கொம்பு குலுக்கிய செங்கைக ளாலே கொட்டுக சப்பாணி
குருமலை மருவிய சரவண பவனே கொட்டுக சப்பாணி.41

எப்பாடை கற்றவரு மெத்தேய முற்றவரு
மெக்கோல மிட்டவருமே
இச்சா வழிச்சுழல லற்றே தவத்தின்வழி
நிற்பார்த மக்கருள்பவா
மைப்பான லொத்தொளிர் மிடற்றார் களிக்குமரு
மைப் போத னைக்குருபரா
வற்றாமு முக்கருணை வைத்தா ளுமைக்குவிழி
யைப்போலு நற்புதல்வனே
கைப்போத கத்தமையர் பிற்பா டுதித்தவொளிர்
கட்டாணி முத்துமுருகா
கைக்காழி நத்துகதை விற்கூ ரசிப்படை
தரித்தா ருவக்கு மருகா
தப்பேது மற்றவ ருளக்கோயி லுற்றகுக
சப்பாணி கொட்டியருளே
தற்போத மற்றவர் வழுத்தேர கக்குமர
சப்பாணி கொட்டியருளே. 42

புத்தேளிர் துய்க்குமமு திற்றீவி யச்சுவைபு
துக்கேர்கொள் முத்தமிழும்வாழ்
பொற்கூட லிற் குடவ யிற்பூம ணத்தகிரி
யிற்சோலை யத்திரியிலே
முத்தீனு நத்துகரை யிற்சோலை யிற்றவழ்மு
ழக்கார் கடற்பதியிலே
முட்டாது பற்பல முழுக்காடல் பெற்றபழ
னிப்பேர்ப டைத்தமலைமேல்
கைத்தான முற்றமலை மைக்கார் முழக்கு பல
வெற்பேது முற்றவரசே
கற்பான் மிகுத்தவுமை கைத்தாம ரைக்குள்வளர்
கட்டாணி முத்துமுருகா
சத்தான புத்தியடி யற்கேய ளித்ததுரை
சப்பாணி கொட்டியருளே
தற்போத மற்றவர் வழுத்தேர கக்குமர
சப்பாணி கொட்டியருளே. 43

குப்பாச மொத்தவுட லிற்பேய்க ளொத்தபொறி
கட்கேவ லெப்பொழுதுமே
கொட்பாயி யற்றியலை யிப்பாச பத்தனை
யருட்பார்வை வைத்தருளியே
தப்பாது பத்திநெறி யிற்சேர விட்டகரு
ணைச் சாது சற்குரவனார்
தற்காவ லுக்கிதுசெ பிப்பாயெ னப்பகரெ
முத்தாறு ணர்த்துபொருளே
கைப்பாசம் வைத்தயம னைக்காலு தைத்தசிவ
னுக்காவல் வைத்த முருகா
கற்பூர மொத்த முறு வற்பார்வ திக்கினிய
கட்டாணி முத்துமுருகா
தப்பான செப்புபிர மற்சாடு பொற்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தற்போத மற்றவர்வ ழுத்தேர கக்குமர
சப்பாணி கொட்டியருளே. 44

## 5. முத்தப் பருவம்

கருவேய் தசைப்பையெனு மொருபேர் படைத்த பல
கசுமால முற்றசிறை மேய்
கடிவாய் படைத்தபுழு நிரை மேய வெப்பமெழு
கனல்போ லனற்ற அயர்வாய்ப்
பெருவே தனைப்படுவ தினிமே லிலைப்புவியில்
பிணிநோய் மிடித்துயர் படாய்
பெருவேத னெற்றிஎழு தவனாணை விட்டதுபல்
பெரியோர் தமக்கு ளுறவாய்
மருவே செறித்தமலர் புனல்தூய் எமைத்தினமும்
வழிபாடு ஞற்றி மகிழ்வாய்
வழுவேது மற்றினிய கவிபாடு முத்தியையு
மறவா தளிப்ப மெனவே
திருவே மிகுத்தஒரு மொழிகூறி முத்திரைசெய்
திறமாக முத்த மருளே
திருவே ரகக்குமர குருசாமி நாதகுளிர்
திருவாயின் முத்த மருளே. 45

அலைவா ரிதிக்கண்வரு மமுதான சொற்கவிகள்
அணியே நிறைத்தணிகுவான்
அயன்மால் விழிக்கரிய பெருமா னழற்கிரியி
னுருவா மணிப்பதியினான்
சலியாத பத்தருண கிரிநாத னுற்றபிணி
சலராசி யொத்த துயர்போய்த்
தவராச ருக்குளொரு முதலாக ஒப்பரிய
தனிஞானம் வைத்தருள் செய்தாய்
கலைமான் வரிப்புலி கிரிடியானை யுற்றனகொல்
கனிவாய் உரைத்தி யெனவே
கவண்வீசு முத்தநகை மறமாதி னுக்குமொழி
கனிவாய் மணிச் சிகரநீள்
மலைராச னுக்குமகள் மகனான சுப்பிர
மணிய மாசின் முத்தமருளே
வளர்பூக முத்துதிரும் வளவேர கக்குமர
மலர்வாயின் முத்த மருளே. 46

தமசான வுட்பகையை முதலோ டறுத்தளவில்
தவமா நிதித்திரளினார்
சனகாதி யர்க் கலையில் சலராசி யொத்தசம
நிலைதா னளித்தருளினார்
எமராச னச்சிறிய மறைவாண னைத்தடிய
வருநா ளெடுத்த அடியால்
இடிபோ லுதைத்துருள விடுசீர் படைத்தடியர்
இனமே களிக்க வருள்வார்
இமவா னியற்றுதவ நிறைவா லவற்குமகள்
எனவே யுதித்த பரையாள்
இருநாழி நெற்கொடற நிலையாயி யற்றுமுமை
இனிதே சுவைத்த கனியாம்
மமகார மற்றவர்கள் கருவூல மொத்தகுக
மணிவாயின் முத்தமருளே
வளர்பூக முத்துதிரும் வளவேர கக்குமர
மலர்வாயின் முத்தமருளே. 47

கல்லா னிழற்குள் மலை வில்லான் மறைத்தெளிவு
கையா லுரைத்த பெருமான்
கைகேயி சொற்றபடி வைதேகி பிற்றொடர
மொய்கான முற்ற பெருமாள்
எல்லோ னியக்கமற மெய்வா னுயர்த்த மலை
கையா லடர்த்த முனிவோன்
எய்யாது மெய்ப்பொருள்சொல் செவ்வாயி னிற்சிறிய
மெல்லா மகிழ்ச்சி யுறவே
வல்லா முலைக் குறவி வில்லா நுதற்கும் வரி
மையார் விழிக்கு மயலாய்
வல்வேடு ருக்கொடுசெல் கள்வா மலைக்குமகள்
மைவாள் விழிக்கு மணியே
மல்லார் புயத்தமுரு கையா இனிக்குமரு
மைவாயின் முத்த மருளே
வளர்பூக முத்துதிரும் வளவேர கக்குமர
மலர்வாயின் முத்த மருளே. 48

மணிவா சகனார் உயவா ரியனாய் வருவார்
மெச்சுங் குருநாதா
வடபா டையிலே யியல்பா வினையே வளமார்
நற்செந் தமிழாலே
அணிபா வலன்வீ ரையர்கோன் மகளாய் அணிகா
சிச்செம் பதிபோயே
அவனார் சுவைசேர் உணவே அடுவாள் இடுவாள்
கைச்செஞ் சிறுசேயே
கணிபா வலனோ தியவா றுடனே கடுவாய்
பைக்கஞ் சுகியான
கனபா யலொடே தொடர்வார் மருகா கனதோ
கைப்பைம் பரியூர்வாய்
பணிவார் விழையா வையுமே அருள்வாய் பரமா
முத்தந் தருவாயே
பகவா திருவே ரகம்வாழ் குமரா பனிவாய்
முத்தந் தருவாயே. 49

செஞ்சொற் றிறமார் பலகலையிற் செலுநுண்
புலமை முதுக்குறைவும்
செவிச்செல் வமுநன் குடைப்பெரியோர் சிந்தைக்
கினிக்கும் பழமறையும்
விஞ்சு திருப்பாற் கடலில்விளை விண்ணோ
ரமுதுங் கொல்லிமலை
விளைபூந் தேனு மனக்கினியாள் மிழற்று
மிசையுங் கலந்துசுவை
கொஞ்சு தமிழும் மணம்வீசக் குறையாக்
கருணை மலர்காமக்
கொடியா முமையாள் எடுத்தருத்தக் கொஞ்சிக்
கொஞ்சிக் குடித்தசுவை
மொஞ்சி மணக்கும் திருவாயான் முத்தந்
தருக முத்தமே
மூவா முதலே சாமிமலை முருகா
தருக முத்தமே. 50

புடவிசுற்றும் கடல்குடித்தும் புயல்படுக்கும் கிரியைவான்
பொரலொழித்தும் புலனடக்கும் புனிதர் சுற்றம் பொலியவே
வடதிசைப் பொன் கிரியிடைச்சங் கரனிருக்கும் படி கடாம்
வரைமிகுக்கும் பொதியவெற்பின் குவடிருக்கும் புகழினான்
அடலரக்கன் றனையிசைப்பந் தயமடக்கும் திறலினான்
அரவணைக்கண் துயிலரிக்கன் றரனுருத்தந் திடுகையான்
குடமுனிக்குந் தமிழுரைக்குங் குரவன் முத்தந் தருகவே
குருமலைக்கண் குடியிருக்கும் குமரன் முத்தந் தருகவே.51

மைக்கடல் மிக்க வெறுப்பொ டெடுத்தெறி யப்படு முத்துவவேம்
மத்த கயத்தை வதைத்துயர் கொப்பி லகப்படு முத்துவவேம்
இக்கை ஒடித்தது கட்கு ளிருத்திய முத்துகளைக் கவரேம்
இப்பி வயிற்றை அறுத்தத னுட்படு முத்தினை யிச்சை செயேம்
கைக்கிரி யற்பின் வளர்த்த மடப்பிடி துய்த்த சுவைக் கழியே
கட்டழ குற்ற குறக்கிளி நச்சிய கற்பக நற்கனியே
முக்கணர் மெச்சிய சொற்சொல் மலர்ப்பொலி முத்த மளித்தருளே
முத்தர்கள் நச்சிய சற்குரு வெற்பவொர் முத்த மளித்தருளே. 52

திருநான் மறையா கமமா தியநூல் செப்பும் பொருளோனே
திசைமா முகனா தியதே வர்கள்சே விக்கும் கழலோனே
உருகா நினைவார் வினைவே ரறவே வெட்டுந் தொழிலோனே
ஒருகால் முருகா எனுமா றுவலார் பக்கம் பிரியானே
பெருமா னுனையே தொழுசீ ரடியார் பெட்பின் படியீவாய்
பெரியோர் மனமா சறுமா றொருகீர் செப்புந் திருவாயால்
முருகா திருமால் மருகா கனிவாய் முத்தந் தாராயோ
முருகார் பொழில்சூழ் திருவே ரகனே முத்தந் தாராயே. 53

ஆலநிழல் மேவுமர னார்விழிக ளாறின்வரு
மாதிநடு வற்றபொருளே
ஆரணமு மாகமமு மோதுமறி வோரறிவின்
ஆகுமள வற்ற தெருளே
நீலமுகில் மானுநிற மாலுமன தாரவிழை
நீடுபுக முற்றமருகா
நீடுகழை வேளுமிக நாணஎழில் மீறுவடி
வாமுதுமை யற்ற குழகா
கோலமுதி ராதுலகெ லாமுதவு தாய்கிரி
குமாரியருள் பெற்றபுதல்வா
கோமளக லாபமயில் போல விதண் மேவுகுற
மாதுதழு வுற்ற புயனே
மூலனிக ரானமுனி வோர்பரவு பாதமுதல்
வாபவள முத்தமருளே
மூவுலகு ளார்கள்பணி சாமிமலை வாழ்முருக
வேள் முறுவன் முத்தமருளே. 54

### 6. வருகைப் பருவம்

வலாரிமணி போலவளர் குஞ்சியொளி விஞ்சநிறை
மதிமுக நிலாவெறிப்ப
மலர்பதும விழியுத்தி எழுகருணை யலைவீச
மணி முறுவல் வாயரும்பப்
பலாயிரர்கள் சூரியர்த மொளிதிரண் டனையவொளி
பயில்மேனி வெயில்விளங்கப்
பராவுசுரர் நரர்முனிவர் பாவமலை தவிடுபொடி
படவடரும் வேல்கை மிளிரக்

கலாபநிரை நீல்விழி குலாவு சிகி செந்துகிர்க்
காண்மயிற் புரவியேறிக்
கனவுதனி லேனுமொரு காலின்வரு மோவெனக்
கருதியக நெகிழுமெளியேம்
சுலாவுதுயர் போகவிரை வாகமறை யோதுசிவ
சுப்ரமண் யாவருகவே
சுராதிபதி மாலயனு மாலொடு சலாமிடு
சுவாமிமலை வேள்வருகவே. 55

முராரிபிர மாதமுள டாதவலி பேசியடி
முடிதேட லுற்று முயல்வாய்
முனாள் புவி யிடாவிண்மிசை போய்முடிகி லாதயர்
வுறாமுமுமு தால்சிவசிவா
பராபர எனாஉருகி யேபரவு காலையவர்
பணிவுக் கிரங்கி யருள்வார்
பராவுகுரு நாதஎளி யோமுனது படியின்மெய்ப்
படிவமெப் படியறிகுவோம்
சராசர மெலாமுருவி யேகியசொ ரூபநிலை
தன்னையெவ் வாறுணர்குவோம்
தயாமிகு குமாரனெனு மோர்பெயரி னாலுரிய
தாமினிலை மேயழைத்தோம்
துராலுடல வாவினை யறுத்தவர் பிடித்தசிவ
சுப்ரமண்யா வருகவே
சுராதிபதி மாலயனு மாலொடு சலாமிடு
சுவாமிமலை வேள்வருகவே. 56

நானார்என் னுள்ளமிது தானார் முளைத்தசில
ஞானங்க ளாரென்னையும்
நானென் றுணர்த்தியவர் யார்உம்பர் தம்பிரான்
ஞாலத்தின் மேலருளினால்
தானாக வந்துதயை செய்திலா னெனிலென்று
தம்மையுணர் பெரியர் சாற்றும்
தவறில்மொழி கேட்டுமழை விழைபயிரை யொப்பவுன்
தரிசனம் பெறவிழைந்தேம்

மானார் கரத்தபெரு மானார் தவத்தின்மரு
மானாகி வருமெமானே
மலையா சலத்திலமர் குறுமா முனிக்குமரு
மறையோது வித்தகுருவே
சூனாற லற்றடியர் வானாள வைக்குமுயர்
சுப்ரமண் யாவருகவே
சுராதிபதி மாலயனு மாலொடு சலாமிடு
சுவாமிமலை வேள்வருகவே. 57

நறாவிரி குராநறு விளாவெட்சி யுருள்மரா
நாடிமுடி மேலணியவா
நறியசிந் தூர நுத லணியவா மைகுவளை
நயனமிட வாசெவியிலே
சுறாவின்வடி வார்குழைகள் சொருகவா தோளின்மேற்
சுடர்முத்து மாலையிடவா
தூயகே யூரந்தொ டுக்கவா கைவிரற்
றுளிரின்மோ திரமணியவா
மறாமலரை நாணணிய வாதூய மடியுடீஇ
மணியரைக் கச்சணியவா
மறையினடி நடுமுடியி லிலகுபத மலர்கட்கு
மணிநூ புரங்களிடவா
துறாதுவினை மாதர்கள் தொடாதுபுனை வேனருகு
சுப்ரமண் யாவருகவே
சுராதிபதி மாலயனு மாலொடு சலாமிடு
சுவாமிமலை வேள்வருகவே. 58

என்னவா வாலுனை எடுக்க வா வுறுபோதில்
எட்டாது விலகுவாயேல்
என்னைவா விப்பிடிப் பதுபோல அருகிலே
ஏனவாய் வருதியையா
உன்னவா விக்குள்வரு வாயென்ன உன்னுவார்க்
குன்னுதோ றோடிஅகல்வாய்
உன்னா திகழ்ந்தபேர் முன்னின்று வலியவாழ்
வுறுவிக்கு மியல்புடையவா

முன்னவா யாதுகோ ழியையோது வாயினால்
முட்டையினை யோதேனெனும்
முதுதமிழ்ப் புலவன்வா யாற்பாடல் பெறுசெய்தி
மொழிவதா லுந்தெரிந்தேன்
சொன்னவா செய்தபெரு மான்மருக னானவா
சுப்ரமண் யாவருகவே
சுராதிபதி மாலயனு மாலொடு சலாமிடு
சுவாமிமலை வேள்வருகவே. 59

அன்னவா கனனாலு முகநாலு முகமா
அறைந்தவா அமரர் துன்பம்
அகலவா வியினில் மகவானவா உடுமகளிர்
அறுவர்முலை யமுதுண்டவா
மின்னவா வியசடையர் குருவான வாவசுரர்
வேரைத் தடிந்தவா வல்
வேடர்மகள் மால்கொண்ட லைந்தவா சொல்லுவார்
மீதிலருள் குறையாதவா
முன்னவா யாவைக்கு முடிவான வாசித்தி
முத்திக்கு முதலானவா
முருகவா வாவென்று மொழிகுழற வோதுவார்
முன்னர்வா ராமைதகவா
சொன்னவா றானநீர்ப் பொன்னிபாய் வளநாட
சுப்ரமண் யாவருகவே
சுராதிபதி மாலயனு மாலொடு சலாமிடு
சுவாமிமலை வேள்வருகவே. 60

மிடலேமி குத்தறிவை யடுமாண வக்கொடிய
விடநோய கற்றுமவு டதமுமாய்
விடியாவு கக்கடையி னிருள்போல கக்கண்மறை
விரிமாயை யைப்பருகு பரிதியாய்
அடலேமி குத்தசுற வெனவேயி டுக்கண்மலி
யலைமாப வக்கடலின் மிதவையாய்
அநியாய மிக்கநெறி வழிவாய்ம றித்தலைசெய்
புலவேடர் கிட்டரிய அரணமாய்

தடையாகி முத்திநெறி யிடையேம றித்தவினை
மலைதூ ளெழத்தடியு மிடியுமாய்த்
தனியேந டக்குமறு மையிலே வழுத்தியவர்
தமைநீள் வழித்தொடரு துணையுமாய்
திடமான பத்தர்வழி வழியேதி ரட்டுமிகு
நிதியான பத்மபதன் வருகவே
சிவசாமி கற்புமிகு சிவகாமி பெற்றமகிழ்
திருவேர கக்குமரன் வருகவே. 61

தழல்சேர் நுதற்கணவர் தழையா னிழற்கண்முயல்
தவமேயு ருக்கொடுறு புதல்வனே
சதுர்மா மறைத்தருவி னுயர்சா கையிற்கனியின்
உறுசா றெனத்தவர்சொல் முதல்வனே
மழவாய் மணிச்சரவ ணமென் வாவி யிற்பதும
மலரேணை யிற்றுயில்கொள் சிறுவனே
மடிமேலி ருத்தியறு மடவார் அருத்தியொடு
தருபால் சுவைத்தமணி யிதழனே
எழுதாம றைப்பொருளை யினிதான புத்தமிழ்தம்
எனவே தமிழ்க்கவிசொல் விரகனே
இகலேது மற்றகுற ளினைமீறு மெய்ப்பொருளை
எழுதோலை யெற்றுநதி யெதிரவே
அழகாக விட்டகவு ணியர்நாத விப்பிரர்கள்
அணியான சுப்ரமணி வருகவே
அடியாரு ளத்தைநிகர் திருவேர கத்திலமர்
அருண்ஞான சத்திதரன் வருகவே. 62

தந்தி மருப்பி லிழைசீப்புத்
தலைமே லழுந்தச் சிகைவாரேன்
சலாகை யுறுத்த மையெழுதேன்
தாழச் செவியிற் குழைபுனையேன்
தொந்தி குழையத் துகிலுடுக்கேன்
சுடர்ப்பட் டிகைகொண் டதையிறுக்கேன்
தொடிகள் மலர்க்கை வடுக்கொளுமா
துறுக்கேன் விரல்மோ திரமணியேன்

சிந்தித் தடியர் அகமலரில்
சேர்த்து மலர்த்தா ளிணையுறுத்தச்
சிலம்பு தண்டை கிண்கிணிகள்
செறிக்கேன் கவுண்மேற் கைநெறிக்கேன்
மந்திப் பிடியாய்த் திருமேனி
வருந்தத் தழுவேன் வருகவே
வரத விரதா குருமலைவாழ் வடிவே
லரசே வருகவே. 63

அன்பா லெடுக்க வருந்தோறு மப்பா லோடி யகல்வாயால்
அன்னை யலனோ பால்சுரந்த தயலோர் மகவுக் களிப்பேனோ
முன்பார் வதிபோற் கறந்தளித்தே முதுமை விலக்கி மகிழ்வேனோ
மொய்ம்பி லணைத்து நொடிபயிற்றி முத்த மளித்தல் மறந்தனையே
வன்பா லுன்பொன் மலர்மேனி வருந்தத் தொடவு மாட்டேனுன்
மலர்த்தா ளிணையென் கண்மணிமேல் வைத்தே புரக்கு மதியுடையேன்
தென்பாற் கயிலை மலையாகுந் திருவே ரகச்சேய் வருகவே
செம்பொன் மலைப்பைங் கொடிபூத்த தெய்வ மலரே வருகவே. 64

## *7. அம்புலிப் பருவம்*

பம்புபே ரொளிவீசு பூதியுடன் மேவலாற்
பரமனா ரின்னருட்கண்
பாங்காய் விளங்கலாற் பானலொண் வாயினைப்
பரிவான் மலர்த்தி நாளும்
உம்பரா ரிம்பரொடு நுகரவிசை கெழுமமுதம்
ஒவா துவந்தீவதால்
ஒண்முத்த மானமிசை யுலவலா லிறைவனடி
யுற்றோர் சிரோரத்னமாய்
எம்பிரான் சம்பந்த மூர்த்திபோ லிலகுமுன்
எழில்கண் டழைக்கின்றனன்
எய்துதற் கரியபே றிதுவெய்த நீமுனம்
இழைத்தமா தவமெதுகொலோ
வம்பறா வரிவண்டு முரல்கடம் பணிசுப்ர
மணியனோ டாடவாவே
வளருமுத் தமிழ்குலவு குருமலைக் குமரனொடு
மதியமே ஆடவாவே. 65

மேற்பாற் பிறப்பினும் கலைகுறைந் திழிவுறுவை
வேண்டுமொளி யின்றிமறைவாய்
மேதினியர் குறைமதிய னிவனென்று பேசுவார்
மீண்டுகீழ்ப் பாலுதிப்பாய்
நாற்பா லிருப்பவரு மொண்கலைச் செல்வனென
நவிலுகினு முட்களங்கம்
நாடியுனை மதியாமல் அல்லோ னெனக்கொள்வர்
நாரியர்கள் கண்டுகரிய
மாற்பா லுளந்தோன்றி னானென்றி கழ்ந்துன்னை
வைதுகா ணவுமஞ்சுவார்
மாறிமா றிப்பிறந் தெய்துபய னிதுகொலோ
வந்தெமது கந்தனருளை
ஏற்பா யெனிற்பிறப் பின்றியின் பெய்தலாம்
இங்ஙனே வாமதியமே
ஏரக நிலாவுசிவ சாமியொடு விளையாட
இங்ஙனே வாமதியமே. 66

அம்பிட்ட விழிமாத ரெருவிட வளர்ந்தவர்க்
கனலாகி மெய்சுடுவைநீ
அகிலமுஞ் சுடுநெற்றி விழியில்வந் தாலுமிவன்
அகலாத தண்ணளியினான்
வம்பிட்டு நாடொறும் வளர்ந்த முய லகனாய்
மறுக்கமுற் றுழலுவாய்நீ
வலியமுய லகனைமல ரடியினில் மிதித்தாடு
வள்ளலருள் வடிவிவன்காண்
கும்பிட்டு மூடுபனி யானடுக் குறுவைநீ
கொங்குநா டெங்குமிக்க
குளிர்பனிக் கொடுநோ யகற்றியருள் செய்தவக்
குரிசிலிவ னென்பதுணராய்
செம்பிட்ட இஞ்சிசூழ் ஏரகக் குமரனொடு
திங்களே யாடவாவே
சிவனைநிகர் பொதியமுனி பரவுதமிழ் விரகனொடு
திங்களே யாடவாவே. 67

மண்மீதி லிருவினை வயத்திற் பிறந்தவை
வளர்த்துடல் விடுத்த பேர்கள்
மாசறு மனத்திரளி னாற்களங் குற்றுநீ
மறுகல்மறை மொழி வாய்மையாம்
கண்மீது கண்பெற்ற செங்கரும் பின்நடுக்
கண்ணுற்ற கடவுண் மணியிக்
கந்தனை நினைந்தவர் பதங்கண்ட பேரும்
களங்கங் களைந்தொளிருவார்
விண்மீது தேசொடு விளங்கினும் சடமயம்
விடாதுதிரி வாயிவனருள்
மேவினோ ரடியருஞ் சித்துருவ ராய்முத்தி
மேவுதல் அறிந்திலாயோ
எண்மீறு மற்புத மிலங்குதிரு வேரகனொ
டிந்துவே யாடவாவே
இகபரமு முயர்வீடு மருள்சாமி நாதனுடன்
இந்துவே யாடவாவே. 68

கருணையா லைந்தொழி னடாத்துபெரு மானிடக்
கண்ணமர்ந் துமையுமானாய்
கனவிடை யிவர்ந்துவரு சோமனென் பெயரினாற்
கண்ணுதற் கடவுளானாய்
தருணமுயர் மேடத் திவர்ந்துலகை வலம்வந்து
சண்முகன் தானுமானாய்
தண்ணமுது புலவர்க் களித்தோம்பு மியல்பினாற்
றண்டமிழர் வேந்துமானாய்
தெருணல மிகுங்கணத் தலைவனாய் மிளிர்தலாற்
றிருநந்தி யடிகளானாய்
திகழுமித் தன்மையா லுன்மீது தயைசெய்து
தெய்வநா யகனழைத்தான்
அருணலம் பெறுமூ முனக்குவந் தெய்தலால்
அம்புலீ யாடவாவே
ஆரணந் தமிழிலகு மேரகம் பொலி முருகொ
டம்புலீ யாடவாவே. 69

தேரா மாந்த ருன்னுடலின் திறமே கண்டந் தணனென்பார்
தேர்ந்தா ருள்ளங் கள்ளனெனத் தெளிந்தார் அமரர் குழுவருந்தும்
ஆரா வமுதுன் பாலிருந்தால் அங்கங் குறைந்தே னலைகின்றாய்
அன்றன் றிரவுற் றலைவாயை அரசென் றுரைக்குங் குறிப்போராய்
சீரார் மறையோர் தெய்வதமாய்த் திகழ்பல் கலையின் செம்பொருளாய்த்
தெவிட்டா வமுத மயமாகிச் சிவமே புரியுஞ் சேந்தனிடம்
வாராய் குறைபோய் வாழ்வுறலாம் வாவா ஆட மதியமே
மகிமைச் சாமி நாதனிடம் வாவா ஆட மதியமே. 70

வெள்ளம் பயிலும் கங்கைவழி மேவி வெள்ளா ளனுமாகி
வேளாண்மைக்குச் சலியாமல் விரும்பும் பயிர்கள் விளைவித்தும்
கள்ளம் பயிலுங் கல்லாரக் கயவர் வண்டர் காதலிப்பாய்க்
காசைப் புதைத்தே யாசைவழிக் கலந்து திரிவாய் நல்லோர்கள்
எள்ளத் தாரா இனத்தினொடு மியைந்தே இரவுற் றியங்குகின்றாய்
எவ்வா றுய்தி வெண்மதியே இனிநீ வாழ எண்ணுதியேல்
வள்ளல் திருவே ரகமுருகன் மருங்கு வாவா மதியமே
மகிமைச் சாமி நாதனிடம் வாவா ஆட மதியமே. 71

மெச்சிக் கலைய னெனச்சிலர்தாம் விளம்பல் கேட்டுச் செருக்கலை பல்
விண்ணோ ரெச்சிற் கலையனெனும் மெய்ம்மை யுணர்வாய் பொங்கலையே
நச்சிக் கலையும் காட்டினையும் நகரு நாடித் திரிகலையோ
நரலைக் கடலுண் தமிழ்க்கலைய ணுகி யிருக்க நயந்ததுணை
இச்சிக் கலையெ லாம்நீக்கி யீடேற் றிடுவோ மெனுமருளால்
இதனைச் சிறிது முணர்கலையே இன்னும் பாணிக் கலைவிரைதி
வச்சைக் கலருக் கரியனொடு வாவா ஆட மதியமே
மகிமைச் சாமி நாதனிடம் வாவா ஆட மதியமே. 72

சுறவேறு கொடிவேந்த னின்னீழ லுற்றுடல்
சுடப்பட்டு மாய்ந்தொழிந்தான்
சுறவேறு கொடிவேந்த னொருவனிவ னீழலாற்
சுரமும்வெம் பவமு நீத்தான்
உறவேறி யுனை யுற்ற கணமந் தரத்திலே
உழல்வார்க ணிலையின்றியே
உள்ளுருகி யிவனையுறு வார்களிக பரசுகமும்
உயர்வீடு முறுவர் கண்டாய்

யிறவேறு பாடுமெனி னீகரும் பொன்னுரைகள்
பேசரு பசும்பொன்னிவன்
பேதமதி யாதுனை யழைத்தனன் கருணையாற்
பேதைமதி யாலகல்வையோ
அறவேறு யர்த்த சுர ரடலேறு பெருமகவொ
டம்புலீ யாட வாவே
ஆரணந் தமிழிலகு மேரகம் பொலிமுருகொ
டம்புலீ யாட வாவே. 73

கடல் சுவற மலைபொடிய வேல்விடுவ னழலினெழு
கைகள்வெய் தாகஅடுவான்
கமலக்கண் ணாரிருவர் தம்மைவன் சிறையிடும்
கண்ணைப் பறிப்ப னுன்னைக்
குடையெனக் கொள்மதனன் விழியினெதிர் வருவனோ
குழவியென இவனை மதியேல்
குழகனழல் விழியினுறு சிறுபொறியி னுலகெலாங்
குதிரையனல் படுபஞ்சுகாண்
படவரவி னெடியகைப் பிணிமுக மருந்தநெய்ப்
படுகவள நீயாகுவாய்
பசுமயிலு நாய்க்குடையி தெனவுனைக் கொத்திப்
பதைக்கப் பதைக்க அடுமே
அடமுனிவு கொளுமுனர கரசரண மெனவிரைந்
தம்புலீ யாடவாவே
ஆரணந் தமிழிலகு மேரகம் பொலிமுருகொ
டம்புலீ யாட வாவே. 74

## 8. *சிற்றிற் பருவம்*

கணங்கொ ளசுரர் கடிநகரின் கன்னி
மதிலோ அதைச்சூழ்ந்த
கலிக்கு முதலை மகரமராக் களுலி
யாழ்ந்த பேரகழோ
வணங்கு மடியார் தலையிலயன் வகுத்த
விதியோ இனியவர்பால்
வருத்தும் பிறவி தரும்பொருட்டு வளரா
நின்ற வினைமலையோ

பிணங்கி யவரைப் பிணிக்கவரும் பெரிய
எருமைப் பரியமனார்
பிறங்கன் மார்போ பெருநரகக் குழியோ
தேவர் சிறைக்கதவோ
மணங்கொள் கமலச் சேவடியால் மகளிர்
சிற்றில் சிதையேலே
வரதா சாமி மலைமுருகா மகளிர்
சிற்றில் சிதையேலே. 75

அனந்தா கமவே தங்களுமற் றரிய வேறு கலைக் குழுவும்
அடிகேள் நின்சே வடிபயில அமைந்த வழியா மென்பர் அவை
தினந்தாம் பயின்று புலனடக்கித் தியானம் புரியும் யோகியர்மெய்ச்
சிந்தை தானும் திருவடிக்குத் திருவா லயமாச் செப்புகின்றார்
மனந்தா னுருகி மலர்தூவி வாழ்த்து மடியார் பயிலுமிடம்
மனமும் கையும் மணிநாவும் வள்ளல் விளையாடரங் கென்பர்
சினந்தான் பெருக வழித்தடையோ சிறியேம் சிற்றில் சிதையேலே
திருவே ரகம்வாழ் குருமணியே சிறியேம் சிற்றில் சிதையேலே. 76

காலைப் பருதி பலகோடிக் கதிர்போ லெழுந்த பேரொளியாற்
கண்கள் கூசித் தலைகவிழ்ந்து கருத்தில் நினைந்தே யிருந்ததலால்
கோலக் குமரா நின்வருகை குறித்துக் கண்டும் அவமதித்துக்
கும்பி டாமல் இருந்தேமோ குறுகி நின்று நீமுறுவல்
பாலிற் பொழியு நிலவொளியைப் பருகும் பறவை யானேமால்
பணிந்து சிறுசோ றன்பாகப் படைத்து விருந்து புரந்திடுவேம்
ஆலைப் பாகே கற்கண்டே அடியேம் சிற்றி லழியேலே
அணியே ரகம்வாழ் குருமணியே அடியேம் சிற்றி லழியேலே. 77

களித்த அசுரர் களித்தடர்க்கக் கண்டும் மண்டின் கணைவலிய
கல்லாம் வில்லிற் றொடுத்தெய்யுங் கணக்கையறியா தவர்முன்பல்
இளித்து நின்றான் மகனென்னேம் இனிய கணவன் விடமுண்ண
ஏகிப் புலவன் மகளாய்ச்சோ றினிதட் டிட்டாள் சேயென்னேம்
குளித்த மடவார் புடவைகொடு குருந்த மேறுங் கோமாளிக்
கூத்தன் மருகென் னேம்குறத்தி குற்றே வலனென் றினியுரையேம்
அளித்தண் கமலச் சேவடியா லரசே சிற்றி லழியேலே
அணியே ரகம்வாழ் குருமணியே அடியேம் சிற்றி லழியேலே. 78

எம்மா யிழைக்கும் சிற்றிலெலா மெந்தை யழித்துக் கூத்தாட
எள்ளத் தனையும் சினவாம லினிது தாள மிடுகின்றாள்
தம்மா தரவா லிம்மடவார் தாமு மெமக்கத் தகையரெனத்
தவறா யெண்ணிக் கொண்டனையாம் தண்ட மிடத்தா யரையழைப்போம்
சும்மா இருக்கும் படிஎவர்க்கும் சொல்ல வல்லாய் உனக்கதனைச்
சொல்வா ரிலைநீ தகப்பனுக்குச் சுவாமி யென்ப துலகறியும்
அம்மா குறும்பர் குலத்தரசே அடியேம் சிற்றி லழியேலே
அணியே ரகம்வாழ் குருமணியே அடியேம் சிற்றி லழியேலே. 79

அன்ன மேறப் படைத்தவன்பா லன்பாய் வாழ அறியாமல்
அவனோர் தலையைக் களைந்தைய மதிலே ஏற்றும் அருந்துவரை
மன்னன் பருப்பை மதியாமல் வருந்தக் குருதி வடிப்பித் துன்
மத்தனாகிச் சுடலையினில் வாழ்வான் மகன்நீ மடமகளிர்
பொன்னின் பொடியும் துகிர்க்கொடியும் பொல்லா மணியும் புனைசிற்றில்
புகுந்தங் கவர்தந் திடுசோறு புசிக்கா தழித்தல் வியப்பன்றே
தின்னப் பலகா ரம்பெறுக சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருவே ரகம்வாழ் குருமணியே சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 80

மலையின் மகட்கு மகனானாய் வாரி மகட்கு மருகானாய்
வலிய தந்தை யுலகழிப்பான் மாமன் பேரா வைகுண்டன்
சிலையைச் சிறைகொய் கொடியோனும் சினவே டுவரும் பெண்கொடுத்தோர்
செகத்தில் வலிமைச் சுற்றமுளாய் செம்மை நெறியிற் செல்லாயோ
மலியும் வலிமை வாய்த்தோர்கள் வகுத்த வழியே வாய்க்காலோ
மகளி ரிடந்தா ளாண்மையினை மைந்தர் காட்டல் மாண்பாமோ
அலகில் வளஞ்சேர் புனனாடா அடியேஞ் சிற்றி லழியேலே
அணியே ரகம்வாழ் குருமணியே அடியேஞ் சிற்றி லழியேலே. 81

வேத முதலாம் பதினான்கு வித்தை மணக்கும் சிவாகமத்தின்
மெய்ம்மை மணக்கு மிருதிகளின் விதமு மணக்கும் விபுதர்முடிப்
போது மணக்கும் ஞானியர்மெய்ப் போத மணக்கும் யோகியர்கள்
புந்தி மணக்கும் கிரியையர்கைப் பூவு மணக்கும் சரியையர்செய்
கோதில் பணிகள் மணக்குமுளங் குழைந்து பாடுங் கவிஞர்சுவை
குறையாச் செம்மை நாமணக்குங் குளிர்பூந் தண்டைத் திருத்தாளால்
மாதர் கொழிக்கு மண்மணக்க வரதா சிற்றி லழியேலே
வளவே ரகத்தில் வாழ்சுப்ர மணியே சிற்றி லழியேலே. 82

எங்கும் கண்கள் கரசரணம் எண்ணி லாத உளனென்றே
இசைக்கு மறையின் முறையிருந்தா லெளியேம் பயனெங் ஙனமுறுவேம்
இங்கு முகங்க ளிருமூன்றாய் இரட்டி மலர்க்க ணீள்கரங்கள்
எடுத்து வருமுன் பெருங்கருணைக் கேழை யடியேம் என்புரிவோம்
பங்க மறுக்கும் பதமிரண்டே படைத்த கருணை யதிற்பெரிதாம்
பண்ணை மகளிர் செய்ததவப் பயத்தாற் பலகால் படைத்திலையால்
அங்க ணரசே யானாலும் அடியேம் சிற்றி லழியேலே
அணியே ரகம்வாழ் குருமணியே அடியேம் சிற்றி லழியேலே. 83

உந்தை புத்தூர் வருபாவை ஒருத்தி மணத்தை ஒருகால்முன்
ஒழித்த பவத்தால் இருகாலும் உறுத்த ஆரூர் வீதியெலாம்
முந்தை யிருளில் நடந்தலைந்த முறைமை யறியாய்ப் பலகாலும்
முயன்று பாவை பலர்க்குமணம் முடிக்கக் கருதும் வேளையிடை
வந்து சிதைத்தி யிப்பாவம் மலர்க்கால் சிவக்க எத்தனைகால்
மகளிர் பால்நீ தூதாக வருந்தி நடக்கப் புரிந்திடுமோ
சிந்தை நினைந்து சிறியேம்செய் சிற்றில் சிதையேல் சிதையேலே
திருவே ரகம்வாழ் முருகோனே சிற்றில் சிதையேல் சிதையேலே. 84

### 9. சிறுபறைப் பருவம்

அருமறைக ளுலகிலுள வாருயிர்ப் பக்குவ
மனேகவித மாதலாலே
அவைபயிலு மாறுபல பலநெறி வகுத்தோது
மந்நெறியி லொவ்வொன்றினைக்
குருமரபில் வருமறிஞர் விரிவாக நூல்பல
குயிற்றியுப தேசித்தனர்
கோணைநெறி நேர்நெறிகள் பலவுமுடி வின்கணொரு
கோதினெறி கூடிமுடியும்
ஒருமகிமை மிகுபெரிய நெறிசைவ நெறியதனை
யுணருமுணர் வுடையர் சிலரே
உலகிலனை வருமிந்த உண்மைநெறி சென்றுய்க
என்றுரை பரப்பு முறைபோல்
திருமறை முழக்கமிகு குருமலை யருட்குமர
சிறுபறை முழக்கியருளே
சிவசமய அறுமுகவ குகபகவ வுமைசிறுவ
சிறுபறை முழக்கியருளே. 85

வருமுறை யுடற்குளுயிர் சுகதுக்க முறுமுறை
மடிந்துமன் னுயிர்போமுறை
மற்றுமுட லுற்றிடும் பைப்படா வகையொன்று
மதியாமல் வாழுமடவோர்
ஒருமுறையு மின்றிமல முழுகியவ ராகமற்
றுய்யுநெறி யுன்னுவோர்கள்
உணரஅருள் புரிகமிவ ணுறுதிரெனு மொலியாக
வுற்றடி வணங்கினோர் தம்
கருமுறை கடந்தின்ப முத்தியெனு மகளினைக்
கடிமணம் புணர்காலையிற்
கடலென முழங்குமுழ வாகஎழு தாமறைகள்
கண்டுகொண் டாட வாய்மைத்
திருமுறை முழக்கமிகு குருமலை யருட்குமர
சிறுபறை முழக்கி யருளே
சிவசமய அறமுகவ குகபகவ வுமைசிறுவ
சிறுபறை முழக்கி யருளே. 86

கருப்புகு பிறப்புறு நயப்புறு கயக்குழு
எதிர்ப்படல் கழிந்து போமின்
கடியமல விருளின்மலி வினையின்மலை யரணினைக்
கவனமொடு காவல் புரிமின்
நெருப்புகு கடைக்கணரு விக்கட மொழுக்குகவுள்
நிலவுலவு சடைமுடியுநீள்
நிகளமழி துகளெழ வடர்த்துவரு தாமரை
நிகர்த்ததிரு வடியுமுடைய
பொருப்புமு னடக்கவுழி ஞைத்தொடை முடித்தியாம்
பொருமாறு வருகின்றனம்
புனல்நொச்சி சூடினது பயனற்ற செயல்வலிய
பொறிசத்தி பொடியு மெனல்போல்
திருப்புகழ் முழக்கமுகி லொத்தகுரு வெற்பிறைவ
சிறுபறை முழக்கி யருளே
சிவத்தரு வினைத்தழுவு பொற்கொடி பழுத்தகனி
சிறுபறை முழக்கி யருளே. 87

ஒருவருணர் தற்கரிய பிரமசொரு பக்கடலின்
உறுமமுது ருக்கொடழியா
ஒளிமினல் பரப்பியடர் பொறியர வுரப்பிவரம்
எனு முறைது ளித்துமயலாம்
மருநில மதிற்பெருகு மசரத மிகுத்தபுனல்
வறளவழு வற்றவடியார்
மனவயலி னற்புமுதல் நிறைபயன் விளைக்கஅவர்
வழிவழிபு சிக்கஉயர்வான்
பெருநெறி நிரைத்துமிகு துயர்வெயி லொழித்தறிவு
பெருகுநன திப்புனலினால்
பிழைநெறி யிடித்துரிய சமயமுல குக்குதவு
பெரியபுக முற்றுலவிவாழ்
திருவருள் முகிற்குரலி னளிகுரு மலைக்குமர
சிறுபறை முழக்கி யருளே
சிவசமய சற்குரவர் முதல்வசிவ சுப்ரமணி
சிறுபறை முழக்கி யருளே. 88

உகமுகமு யர்ந்துவளர் கயிலையில மர்ந்தொர்குறை
யொருபொழுது மின்றிநிறைவாய்
உமையனுதி னம்படியு மமுதசர சின்கணெடி
துலகமுய வந்தநதியே
பகவதியெ னும்பெயரி னிலகுறுப சுங்கொடியி
னழகுறம லர்ந்தமலரே
பழவினையெ னுங்கொடிய தளைபொடியு றும்படிசெய்
பதவலிமி குந்தஅரமே
இகபரமு நன்குதவு மிதுவெனவ றிந்துதவ
முயல்பவர் பொதிந்தநிதியே
இவைநலபொ லங்களென அறிமதுகை யின்றியுழல்
எளியமுள நம்புகதியே
செகதலம் விளங்கவுயர் குருமலையி னின்றகுக
சிறுபறைமு ழங்கஅருளே
சிவநெறிவி ளங்கவரு குருமுதல்வ செங்கைகொடு
சிறுபறைமு ழங்கவருளே. 89

பொங்குகரு மணியொளித் திரளனைய பிடர்மீது
புரள்கின்ற குஞ்சிமுகிலும்
புதுநில வெரிக்கின்ற முகமதியு நகையிதழ்ப்
புனிதமுத் தும்பவளமும்
மங்கல மிகுங்களச் சங்கமுங் கைகளாம்
வண்மைமிகு கற்பதருவும்
மனவிருளை யும்பருகும் வேலெனும் பருதியும்
மடநடையை ராவதமுமோர்
சிங்கலற மெய்யன்பர் சிந்தையி னினைந்தவை
சிறக்கவருள் அருள் மணியுமொண்
சீராவும் வளர் பரிச் சிகியுமடி மலர்மிசைத்
திருமகளு மிலகுமுறையால்
திங்கணிற வமுதுததி யொத்தகுரு வெற்பிறைவ
சிறுபறை முழக்கியருளே
சிவநெறி விளங்கவரு குருமுதல்வ செங்கைகொடு
சிறுபறை முழக்கியருளே. 90

தந்தம முயற்சியினி லொண்பொருள் திரட்டிமா
தவர்நுகர வமுது கனிவாய்த்
தந்தவர்க் கேவல்புரி யுந்திறத் தோர்நெறி
தகுந்தகுந் தகுமென்னவும்
சொந்தமிவை யென்றுகைப் பொருள்பிடித் தொருபிடிச்
சோறுமீ யாதலோபம்
தோந்தோமி தகலரிய நிரையத் திருத்திடும்
தொந்ததொந் தங்களெனவும்
சந்தத மவாமுதல வாகவெழு மாறுபகை
தமைமிதி மிதித்தியெனவும்
தன்கடன் தாங்கல்தொண் டென்கடன் எனுங்கொள்கை
தரிதரித ரித்தியெனவும்
சிந்தையி லுணர்த்தமனி தர்க்குமுரு கப்பநின்
சிறுபறை முழக்கியருளே
சிவசமய சற்குரவ குருமலை யருட்குமர
சிறுபறை முழக்கியருளே 91

கடுக்கைத் தொடைவா ழளிமுழங்கக் கங்கைத்
தடினித் திரைமுழங்கக்
கண்ணிற் கருணைக் கடல்முழங்கக் கையிற்
கலைமான் மறிமுழங்க
உடுக்கை விரிக்கத் தகுநூற்பா உரைத்து
முழங்கக் கனல்முழங்க
உபய பதத்தில் மறைமுழங்க உமையாள்
கைக்கொட் டொலிமுழங்கத்
தொடுக்கு மிசைக்கந் தருவர் சுரர் சுருதி
முனிவர் துதிமுழங்கத்
தூய முனிநா ரதன்யாழ்தும் புருவின்
வீணைச் சுதிமுழங்க
முடுக்கி யரனார் நடமுழங்க முழக்கி
யருள்க சிறுபறையே
முடியா முதலே ரகமுருகா முழக்கி
யருள்க சிறுபறையே 92

மதியந் தவழ்மா ளிகைகடொறும் வருநல் விருந்து புறந்தருவார்
மதுர முகம னுரைமுழங்க மகிழ்ந்து வாழ்த்து மொழிமுழங்கப்
பதியும் பசுபா சமுமுணர்ந்தோர் பகரு ஞானக் கலைமுழங்கப்
பழுதி லடியார் சிவபூசை பயிலு மணிநா முழங்களன்றும்
புதிய தமிழின் துறைமுழங்கப் புலவர் புகழெங் கணுமுழங்கப்
பொன்றாத் தரும வளமுழங்கப் புனிதந் தருநின் துதிமுழங்க
முதிய மறையா கமமுழங்க முழக்கி யருள்க சிறுபறையே
முடியா முதலே ரகமுருகா முழக்கி யருள்க சிறுபறையே. 93

தழங்கு முழவ மரங்கமெலாம் தரும முரசஞ் சாலையெலாம்
தமிழி னினிமை சபைகளெலாம் சாந்த நிலைமை சிந்தையெலாம்
கழங்கு கழலம் மனைப்பண்கள் கனிவாய் மகளிர் பண்ணையெலாம்
களிக்கு மயிலி னகவல்மழைக் கலிப்பு மலர்ப்பூங் காவிலெலாம்
விழுங்கு பூந்தேன் கனிவாழை வெடிப்புத் தேமா விளைந்தகனி
வீழ விரியும் புள்ளினொலி விளைந்த வயற்சூழ் தடங்களெலாம்
முழங்குஞ் சாமி மலைமுருகா முழக்கி யருள்க சிறுபறையே
முடியா முதலே வடிவேலா முழக்கி யருள்க சிறுபறையே.94

## 10. சிறுதேர்ப் பருவம்

அவமே புரிந்துயிரி னலமே கவர்ந்துவினை
யடவியி லொளிந்து திரியும்
அலையே மிகுந்தபுல னெனும்வேடர் தங்கள்வலி
யறவே தடிந்து துயர்நீள்
பவமாய மென்சிறை யிடுமாசை முதலான
பகையாறும் வென்று மழுகாப்
படைஞான வாள்பிடித் துறுதியாம் வேலும்
பரித்து மதியாம் குடைக்கீழ்ப்
புவனேசு வரியுமொரு புடைமேவ வுலகங்கள்
போற்ற மணி மன்று ளென்றும்
பொலி ராஜ சேகரனி னருளாணை கொண்டறம்
பொன்றா தளிக்கு மேன்மைச்
சிவராஜ யோகர்சுடர் முடியான சேவடிய
சிறுதே ருருட்டியருளே
திருவே ரகத்திலரு ளுருவான சுப்ரமணி
சிறுதே ருருட்டியருளே. 95

ஆரா தரிக்கவிது நீங்குவதெ னத்துடித்
தயர்கின்ற பக்குவத்தே
அஞ்சற்க விண்ணுயிர்க் கழிவொன்று மில்லைநல்
அறிவினை மயக்குபித்தந்
தாராத சிவசரித வமுதுமா கமமறைத்
தண்பாலும் ஒண்பிரமமாந்
தண்ணறுங் கனியுமுட் கொள்கயாம் பரிவினால்
தருமருத் துப்பையினைச்
சீராக ஆய்ந்துவெண் பொடியெடுத் துப்பூசு
திருமணியை அணிகஅன்பால்
திருவா றெழுத்துமந் திரமோது பிணியீது
திருமென் றருளியடியார்
தீராத பவநோ யகற்றுவைத் தியநாத
சிறுதே ருருட்டியருளே
திருவேர கத்திலரு ளுருவான சுப்ரமணி
சிறுதே ருருட்டியருளே. 96

பவ்வமுத வியவெண் டுரங்க விரதத்தனும்
பதுமமிசை தன்போலவே
பயில்கின்ற ஓதிமத் தேரவனு மரவம்
படப்பட ரிறக்கை கொட்டிக்
கவ்வியெழு பறவையிர தத்தனும் தத்தமது
கடிநகர மொடிவில் படைகள்
கடியநடை யிடியமொழி எரியும்விழி யசுரர்வன்
கைப்படா மற்பொலியவும்
அவ்வவர் மனோரதஞ் சிதையாம லினிதோடு
மாறுதவி ராது பெறவும்
அங்கைதலை மிசைகொண்டு சங்கரி சுதாமுருக
அரகர வெனத்துதித்தே
செவ்விபெற நிற்கின்ற திருமுன்றி லிறைவனே
சிறுதே ருருட்டியருளே
திருவே ரகத்திலரு ளுருவான சுப்ரமணி
சிறுதே ருருட்டியருளே. 97

கன்றியுல கம்புதைத் தெழுமிருட் படலக்
கடும்பகையை யோராயிரங்
கைவாள்கொ டுந்துரந் தடுதிறற் கதிரெனும்
கடவுளும் கடலினடுவண்
வன்றிறற் சூரபன் மாவரசி ருந்தநெடு
மதில்மகேந் திரபுரியிலே
வன்சிறையி லவன்மகன் கொண்டுவைத் தன்றுதனை
வாட்டியவி தத்தையெண்ணி
இன்றுமத் தென்றிசையி னேகுகா லுடல்பனித்
தெழுமொளி மழுங்கிக்கரம்
எழிலாக வீசவும் கூசுவா னத்திசை
யிருந்தரசு புரியசுரரைத்
தென்றிசைக் கேயினுஞ் செலவுய்த்த சேவகா
சிறுதே ருருட்டியருளே
திருவேர கத்திலரு ளுருவான சுப்ரமணி
சிறுதே ருருட்டியருளே. 98

பல்வகைய மாயங்கள் பண்ணுசூர் மகளிர்மலி
பாசாட விக்குமுடிவு
பண்ணிவன் சினவுழுவை மதவழுவை முதலாய
பல்விருக வகைதுரத்திப்
புல்வகைய தென்னாம லாணவத் தூறவை
பொசுக்கிவேர் கல்லிநீக்கிப்
புண்ணியப் புனல்பாய்ச்சி யர்ச்சனை வயற்கண்
பொருந்துமன் பாழநட்டுச்
சொல்விதியி னில்லாத பட்டிபுகு தாவகை
துரத்தியைம் புலனடக்கும்
தூய்மையாம் வேலியிட் டோம்புசிவ மாம்பயிர்
செழித்துவிளை போகநுகரும்
செல்வவே ளாளர்பணி செய்யவே ளரசனே
சிறுதே ருருட்டி யருளே
திருவேர கத்திலருள் உருவான சுப்ரமணி
சிறுதே ருருட்டி யருளே. 99

தவந்த வாதன முயன்றவை திருவடிச்
சமர்ப்பித்துப் பெறுஞானத்
தாவில் பேரொளி யால்மல மாயையாம்
தமசெலா மறநீக்கி
நிவந்த வாதர வாலகக் கோயிலி
னின்றிரு வுருநாட்டி
நிமிட நேரமு மறப்பின்றி வழிபடு
நேயமெய்த் தொண்டில்லேன்
சிவந்த வாய்மட மகளிர்மெய்ம் முயக்கமும்
செம்பொனும் பெருவீடும்
சிந்தை செய்துழல் பேதையேன் பணியையும்
சிறியதென் றிகழாமல்
உவந்த பேரருட் குருமலை நாயகன்
உருட்டுக சிறுதேரே
உண்மை ஞானவின் புருமுரு கப்பிரான்
உருட்டுக சிறுதேரே. 100

அளியி னாலறத் திறனெலாந் தெளிவுற அறைந்துமெய்ப் பொருள்கூறும்
அரிய மாமறைப் பனுவலோ சிவனருள் ஆகம வகையோமுன்
தெளியு நுண்புலச் சங்கமே றியவர்செய் செந்தமிழ்த் தொகைதாமோ
திருவ ணாமலைக் குருபர னருளிய திருப்புகழ்த் தேம்பாகோ
துளிது ளித்திட விழிப்புனல் சிதம்பர சாமியூ மைப்பாலன்
துகளில் பாம்பனூர் முனிவரன் அருளிய துதிகளோ எளியேன்சொல்
ஒளிருந் தோளணி யருட்குரு மலைக்குக னுருட்டுக சிறுதேரே
உண்மை ஞானவின் புருமுரு கப்பிரான் உருட்டுக சிறுதேரே. 101

பரந்த நின்றிருப் பேரருட் கடலிடைப்
பயில்கின்ற பனிப்பாறைப்
பண்பு ளேமதில் மூழ்குவே மெழுகுவேம்
பலவயிற் றிரிகிற்பேம்
வரந்த ராயென்பம் ஒன்றும்வேண் டிலமென்பம்
வழுத்துதும் பழிப்பேமுன்
வழிவ ழித்தொண்டர் பணிபுரி வேமுனை
வலிந்துபுன் பணிகொள்வேம்
நிரந்த பேரருட் செல்வமெய் தினமென
நெடுமொழி பலசொல்வேம்
நிரப்புற் றேமென்பம் அவையெலா முவந்தெங்கள்
நினைவெலாம் நிறைவேற்றும்
உரந்த வாதசீர்க் குருமலை முருகவே
ளுருட்டுக சிறுதேரே
உண்மை ஞானவின் புருமுரு கப்பிரா
னுருட்டுக சிறுதேரே. 102

அலகி லாமறை யாகமம் வாழ்வுற அவைவழி வழிவந்த
அரிய பல்கலை வாழ்வுற அழிவிலா அறங்களெல் லாம்வாழ
பலவ ளங்களும் பொழிமழை வாழ்வுறப் பயிரெலாம் மிகவாழப்
பழுதி லின்பமே மேவியா ருயிரெலாம் பல்கியெங் கணும்வாழ
கலக நோய்மிடி முதலிய தீயவை கடிந்து மாநுட ரெல்லாம்
கடவு ளன்புமன் னுயிர்த்தயை முதனலங் கலந்துசந் ததம்வாழ
உலகம் வாழ்வுறக் குருமலை வாழ்குக உருட்டுக சிறுதேரே
உண்மை ஞானவின் புருமுரு கப்பிரான் உருட்டுக சிறுதேரே. 103

## குறிப்புரை

1. **புலவர் குழு** - தேவர்கள் கூட்டம். **பால் புணரியை மதித்து** - பால்கடலைக் கடைந்து. **பசிய முகிலும்** - (தெய்வக்) கார்மேகத் திருமாலும். **பகவன்** - பொல்லாப் பிள்ளையாரை. 5. **சுரநதி** - தேவகங்கை. **திளைத்து ஆடு காலை** - மூழ்கி விளையாடும் பொழுது. **வெண்கோடு** - வெண்ணிறக் தந்தம். **செம்பொருளை** - சிறந்த பிரணவப் பொருளை.

2. **ஏர்** - அழகு. **ஏக்கற்று** - ஏங்கி. **ஒப்பு ஓதரும்** - ஒப்பு சொல்ல முடியாத. **செம்பாவை** - சிறந்த திருப்புகழ்ப் பாடல்களை. **பருதி** - சூரியன். **ஒளி மட்கு** - ஒளிமழுங்கச் செய்யும். **குருமணி** - சிறந்த ரத்தினம், **தீம்பாலின் உததி** - இன்பப் பாற்கடல். **செல்வத் திருப்பாவை** - திருமகள். **சேர்த்தியின்** - கூட்டுறவினும். **பட்டர்பிரான்** - பெரியாழ்வார். **கோதை** - ஆண்டாள்.

3. **குரிசல்** - பிரமன். **மேகம்** - திருமால். **வைத்தவன்** - ஏந்திய உருத்திரன். **பூமனை** - பிரமனை. **சதுரன்** - மேம்பாடுடையவன். **சருவ பூரணப் பிரமம்** - எங்கும் நிறை பெரிய பொருள். **ஏமம்** - இன்பம்; காவலுமாம்.

4. **ஐந்தொழில்** - பஞ்ச கிருத்தியம். **ஆதி** - ஆதி சத்தி. **இச்சை** - இச்சா சத்தி. **கிரியை** - கிரியா சத்தி. **தனு** - உடல். **கரணம்** - (மனம் புத்தி சித்தம் அகங்காரம்) எனும் அந்தக்கரணம். **இறை** - சிவபிரான். **முந்தை** - முதன்மை யான. **முளரி விழி** - நெருப்புக் கண். **கொந்தவிழ்** - கொத்தாக மலர்ந்த. **நறும் கா விரிக்கும்** - மணமுள சோலைகளைப் பெருக வைக்கும். **புனல் காவிரிக்கு** - நீர்நிறை காவிரி நதிக்கு. **குவலயம்** - நிலவுலம்; ஆகுபெயர். **குல அமரர்** - சிறந்த தேவர்கள்.

5. **நேர் இல்** - ஒப்பில்லாத. **முனி**- நாரத முனிவர். **கனி** - மாங்கனியை. **திருமாது உளம் கனி** - அழகிய மாது உள்ளம் கனிந்து. **கன்னேரும்** - கல் ஒத்த. **மரகதவல்லி** - உமாதேவி. **கனி** - கனிவு. **மின்னேரும்** - மின் போலும். **அமர குஞ்சரி** - தேவயானை. **விரகனை** - வேட்கையனை.

6. **விதியை** - பிரமனை. **விதி மாலினுக்கே** - பெற்ற திருமாலுக்கே. **அவி** - அவிர்ப்பாகம். **விதிப்பன்** - (புது)விதி செய்து தருவன். **முனைந்த** - கர்வம் கொண்டு எழுந்த. **சிறுவிதியை** - தக்கனை. **அவ்வரி** - அத்திருமால். **விதிர்ப்ப** - நடுங்க. **தடிந்து** - வெட்டி. **விபுதர்** - தேவர்கள். **வடுக்கொள** - தழும்படைய. **வீரனை** - வீர பத்திரரை.

7. **ஆக்கும் தொழிலால்** - படைப்புத் தொழிலால். **மலரோன்** - பிரமன். **காக்கும் தொழிலோன்** - திருமால். **வாக்கு முதல்வி** - கலைமகள். **மகிழ்நன்** - கணவனான பிரமன். **தேக்கும்** - நிறையும்.

8. **இரு நீழல்** - சிறந்த நிழல். **நால்வர்** - சநகர், சநந்தனர், சநாதனர், சநற்குமாரர். **ஒளி நெறி** - சன்மார்க்கம். **குரு முதல்வன்** - தட்சிணாமூர்த்தி. **குரவர்** - சந்தான ஆசாரியர்கள். **எறி** - வீசுகிற.

9. **ஓம்பும்** - வளர்க்கும். **அகவை** - வயது. **அந்தணர்கள்** - பிரமசாரிகள். **வாரி** - கடல். **புணை** - தெப்பம். **உருமூன்று** - அருவம், உருவம், அருவுருவம்.

10. **வாது** - சமய வாதம். **பதிகம்** - திருநீற்றுப் பதிகம். **அங்கண்** - குளிர்ந்த அருள் நோக்கு. **காடு** - சுடுகாடு. **மறையின் முடி** - உபநிடதம். **மிருதி** - ஸ்மிருதிகள். **ஏற்றர்** - ரிஷப வாகனர்.

11. **வலி** - வலிமை. **மாழ்கும்** - வருத்தும். **பவ நோய்** - பிறவி நோய். **பற்பம்** - பஸ்பம். **ஆறு எழுத்து** - சடக்கரம். **அக்கமணி** - உருத்திராக்கம். **இடுக்கண்** - துன்பம். **மிடி** - வறுமை. **விமலன்** - சிவன். **விழியின் மணி** - கண்மணி.

**12. நிலவுவது** - விளங்குவது. **இயல்பு** - இயற்கை. **பொதுமறை** - திருக்குறள். **பகவன்** - சிவபிரான். **நெடுமால்** - உலகளந்த திருமால். **பண்ணவர்கள்** - தேவர்கள். **நச்ச** - விரும்ப. **கொண்ட** - விழுங்கிய. **தேவு** - தெய்வம். **வைத** - நிந்தித்த.

**13. அசரம்** - நிலைத்திணை; **சரம்** - இயங்கு திணை, **மறை** - வேதம். **ஓதி உணராத ஞானம்** - சிவஞானம். **அநுபூதி** - உடனாதல்; **அநு** - உடன்; **பூதி** - ஆதல்.

**14. அவஞான நெறிகள்** - பயனிலாத வீணான அழிவு வழிகள். **நவ நவமாக** - புதிது புதிதாக. **தவறு நெறி** - பிழையான வழிகள். **அரியேறு** - ஆண்மையுடைய சிங்கம். **பயில கிற்றிலேம்** - பழகும் ஆற்றலிலம். **சால்பு** - நிறை பண்பு. **சார்பை** - சாரும் தொடர்பை. **முனி** - மெய்கண்ட தேவ நாயனார்.

**15. புடவி** - பூமி; ஆகு பெயராய் நிலைமகளை உணர்த்தியது. **புடவை** - சேலை. **பொங்கோதம்** - கடல். **பொதிய முனி** - அகத்தியர். **சததள முளரி** - நூறிதழ்க் கமலம். **போதன்** - பிரமன். **தடவரை** - மேருமலை. **கொடுமரம்** - வில். **தாணு** - சிவன். **உவப்ப** - மகிழ. **மடமகளிர்** - இளம் பெண்கள். **சுடுபொன்** - மாற்றுயர்ந்த பொன். **அடிசில்** - சமைத்த உணவு. **மலரமளி** - பஞ்ச சயனம். **அவாவி** - விரும்பி. **உரையில்** - பேச்சற்ற. **மறையின்** - வேதாகமத்தின். **பரவும்** - வழிபடும்.

**16. அமுத உததி** - பாற் கடல். **மதலை** - உபமந்யு முனிவர். **அத்துவிதம்** - இரண்டற்ற நிலை. **மாயா வெங்களம்** - மாயையின் போர்க்களமான பூவுலகம். **புலப்பகை** - ஐம்புலப் பகைவர்கள். **பாணிக்கில்** - தாமதித்தால். **சருவ மங்களை** - உமாதேவி.

**17. விரைய ஆரம்** - மணமுடைய சந்தன மரம். **பாவும்** - பரவிய. **பராரை** - பருத்த அடிப்பாகம். **சேகணி** - செம்மையுடைய வேங்கை. **பைம்புனம்** - பசிய தினைப்புனம். **ஓவா** - நீங்காத. **நிலாநுதலி** - எட்டாம் பிறைபோன்ற நெற்றியுடையவள். **குறமினாள்** - குறவர்குல மின்கொடியான வள்ளியம்மை. **விடலாய்** - காளையே. **கலாதரன்** - பல கலைகளையுடைய சந்திரன். **சுரருலோக நதி** - தேவகங்கை. **நீளிறகு** - நெடிய கொக்கிறகு. **கனகி நறு மதலை** - பொன்னிறமான ஊமத்தை. **மத்தம்** - ஊமத்த மலர். **கணுக்கு** - கண்கட்கு. **சிலா** - கற்கள். **பராசலம்** - திருப்பரங்கிரி.

**18. பட்டிமையும்** - வஞ்சகமும். **கொடும் படிறும்** - கொடிய பொய் ஒழுக்கமும். **படராமே** - (என்னில்) படராதபடி. **சட்டமரும் பதம்** - நன்கு அமைந்த திருவடிகளில். **சஞ்சரிகம் புரையும்** - வண்டுபோன் றிருக்கும். **குரல்** - ஒலி. **மட்டறு** - அளவற்ற. **உடைமணி** - மணியுடை என மாற்றுக. **தரள வடமும்** - முத்து மாலையும். **அட்டமி மதிநுதல்** - எட்டாம் பிறை போன்ற நெற்றி.

**19. துயில்கின்றோனும்** - துயிலும் திருமாலும். **எண் கணனும்** - எட்டுக் கண்களை யுடைய பிரமனும். **காவின் கோவும்** - கற்பக நாட்டு அதிபனான இந்திரனும். **எங்கோ** - எம்பெருமா! **இந்தா** - இங்கே வா. **சூர்** - சூரபதுமனை. **இருஞ்சீர்** - பெரும் சிறப்பு. **கொங்கோடு** - (செம்மைத்) தேனுடன். **வண் கா** - வளமான சோலைகள். **செங்கோடு** - திருச்செங்கோடு எனும் திருப்பதி. **கும்பு** - கூட்டம். **பரங்கோடும்** - திருப்பரங்குன்றமும். **செம் கோ** - செம்மையையுடைய தலைவன்; சிவந்த வேள். **குருவின்கோ** - குருமலை; சுவாமி மலை.

**20. குஞ்சி** - குடுமி. **மஞ்சாட** - அழகு அசைய; மேக அசைவு போன்ற. **திருவிழி யருள்** - உருத்ராட்சம்; பேரருளுமாம். **மெல் நனை** - மெல்லிய

அரும்பு. செவிலியர் - வளர்ப்புத் தாயர்.

21. தே மருவு - தேன் பொருந்திய. மந்தாரம் - தேவ ஐந்தருவுள் ஒன்று. பொலம் தாரு - அழகிய விருட்சம். பொழில் - சோலை. ஏசிலா - குறை கூறுதல் இல்லாத. தேமொழியர் - தேவ மாதர்கள். நலிந்தே - வருந்தி. பஃறீமை - பல தீமை. சூதமாய் - மாமரமாகி. வாரிதியில் - கடலில். வாகை அயில் - வெற்றிவேல். ஈர - இரண்டாகப் பிளக்க. நாமுற - அச்சம் உண்டாக. விசும்பார் பதாகை - விண்ணளாவிய வெற்றிக் கொடி. நாத - நாதனே. முகம் ஐந்தாகினார் - ஐம்முகச் சிவனார். மஞ்சாரும் - அழகுடைய; மேகம் போன்ற எனினுமாம்.

22. வயவாகு - வீரவாகு தேவர். இணை பிரிவரு - இணைபிரியாத. நவ வயவர்கள் - நவ வீரர்கள். செய் ஏல்வை - செய் பொழுது. தவமகன் - (தான்) தவம் செய்து வந்த தநயன். தழை பசி - மிக்க பசி. பதயுக - இரு திருவடிகளை யுடையவனே.

23. தொங்கல் - மாலை. கலவி - கலந்து. பொங்கு ஆதவன் - ஒளிமிக்க சூரியன். சோமன் - சந்திரன். அங்கி - அக்கினி. புயம் - எட்டுத் திருத்தோள்கள். மங்காத எரி - அணையாத மழு. அரிணம் - மான். வரி யரவம் - புள்ளிகளை யுடைய பாம்பணி. அபசு மாரன் - முயலகன். மன்று - சித்சபை.

24. தகர் - ஆடு. தகர் உற - சிதைய. வயனம் - வகை. வடு - தழும்பு. நந்தாது - பின் வாங்காமல். ஒறுக்க - தண்டிக்க. வெண்தாமரையாள் கணவனான பிரமன், செந்தாமரையான் மகன் என்பது முதலடியில் உள்ள குறிப்பு.

25. ஒருவாராகி - பிரியாதவர்க ளாகி. ஒருவராம் உருவார் - ஒரே திருமேனியரான. உஞற்றும் - செய்த. பெருவான் சோதி - பெரிய ஞான ஒளி. உய்ப்ப - செலுத்த. வழி பிரசம் - பெருகி வழியும் தேன். கரு ஆராமே - கருக் கொள்ளாமலேயே.

26. முனி - நாரதர். தகர் - ஆடு. ஏணை - பெருமை; வலிமையுமாம். வயவாகு - வீரவாகு. ஊர்தி - வாகனம். கோணை - மாறுபாடு. உலகு பொதி கோதில் உருவம் - விஸ்வ ரூபம். சாணை - சாணைக்கல். சவி - ஒளி.

27. பெரிய பொருள் - பிரமம். திக்குவாய் - தத்திப் பேசும் வாய். சுக்குவாய் - (உதிரம்) கக்கிய வாய். வினவு - (பிரணவப் பொருளை) வினவிய. மறைப் பொருளை - வேதப் பொருளை. பிரமநிலை - பிரமாநுபூதி நிலையை. மழகளிறே - யானைக் கன்றே.

28. தேறா - தெளிவு பெற உணராத. மரித்தே ஒழியாது - செத்துப் போகாதபடி. கரி - யானை. பரி - குதிரை. கன்னிப் புரிசை - அழியாத மதில். வயவாகுக் காளை - காளைபோன்ற மிடுக்குடைய வீரவாகு.

29. உந்தி - தொப்புள். செனிப்பித்து - தோற்றுவித்து. நைய - அடியொடு தேய. நரலை - ஒலி. தரங்கம் - அலைகளை யுடைய கடல்; ஆகுபெயர். பைய - படங்களை யுடைய. செம்பாவை - திருமகள். பத பன்மம் - திருவடித் தாமரை. உகத்தின் கடை நாளில் - யுக இறுதி தினத்தில். வையம் - பூமியை.

30. தழலோன் - அக்கினி. பாகீரதி - கங்கை. முரலும் - ஒலிக்கும். திங்கள் - பிறைச் சந்திரன். அவிர் - பிரகாசிக்கும்.

31. வெளுப்பாக்கும் - தோற்கடிக்கும். தெருள் - தெளிவு. மாயேயங்கள் - மாயையின் கூட்டங்கள். முனைந்து - முற்பட்டு. இருமை வினை - நல்வினை, தீவினை. இயக்கும் - இயங்கச் செய்யும்.

32. பொலந்தரு - கற்பக விருட்சம். புரந்தரன் - இந்திரன். புலோமசை - இந்திராணி. கரந்தே - ஒளித்து. வேணு - மூங்கில். வறங்கூர - பஞ்சம் மிகுதியாக. குறுமுனி - அகத்தியர். குண்டிகை - கமண்டலம். ஐங்கரன் -

கணபதி. **சலந்தரம்** - மேகம். **சையம்** - சையமலை. **உற்பவி** - தோன்றிய. **பொன்னி** - காவிரி. **தவிராது** - தடைபடாது. **சாலி** - நெற்பயிர். **கழை** - கரும்பு. **பூகம்** - கமுக மரம்.

33. **பதுமம்** - தாமரை. **அளி** - வண்டு. **பொழில்** - சோலை. **பறழ்தமை** - குஞ்சுகளை. **கதிரவன்** - சூரியன். **குடபால்** - மேற்குத் திசை. **நீள்வரை** - அஸ்தமன பர்வதம். **விது** - சந்திரன். **விரை** - மணம். **ஓர்வார்** - தியானிப்பார்.

34. **நல் நதியே** - பேரருட் செல்வமே. **விரகர** - வேட்டையுடையவனே. **பவ சாகரம்** - பிறவிக் கடல். **புணையே** - மரக்கலமே. **பழிச்சிய** - துதித்த.

35. **தெள்நிலா** - தெளிந்த நிலவு. **உவட்டெழு** - பொங்கு எழும்.

36. **முன்னி** - உணர்ந்து.

37. **உன்னி** - ஊன்றி எண்ணி. **தேராது** - ஆராயாமல். **பாராரை** - உலகரை; குருடர்களை எனலுமாம். **சந்திப் போது** - மாலைக் காலம்.

37. **இயங்குவன** - சரம். **நிற்பன** - அசரம். **உண்மை** - உள்ளதாம் தன்மை. **இயமானன் அல** - ஆன்மா அல்ல. **வயங்குவது** - பிரகாசிப்பது. **வாஞ்சையால்** - ஆசையால். **உயிரில் வழி** - உயிரில்லாத பொழுது. **சுயங்கிரியை** - சுதந்தர செயல். **வாலறிவன்** - பரிசுத்த அறிவினனான பரமன். **தோமற** - குற்றமில்லாதபடி. **துன் மதியர்** - அற்ப அறிவினார். **முறுவல்** - புன்னகை. **தயங்கு கை** - பிரகாசத் திருக்கரம்.

38. **பன்மார்க்கம்** - பல சமயங்கள். **ஓர்ந்தவைகள்** - அறிந்தவைகள். **நன்மார்க்கம்** - நல் வழிகள். **எந் நெறியும்** - எவ் வழிகளும். **இகலா** - பகைக்காமல். **முப்பொருளை** - பதி, பசு, பாசங்களை. **நவை** - குற்றம். **ஓர்ந்து** - உணர்ந்து. **ஈட்டி** - சம்பாதித்து. **சுத்த அத்துவிதம்** - சுத்தாத்வைதம். **சன்மார்க்க சித்தி** - ஞான சித்தி.

39. **பருதிசத கோடி** - நூறு கோடி சூரியர். **மாழ்க** - மழுங்க. **சிந்துமதம்** - மதம் சிந்தும். **சிந்தூர திலகம்** - சிந்தூரத் திலகம் அணிந்த. **கயமுகன்** - யானை முகன். **அடல் ஆழி** - ஆற்றல் காட்டும் சக்கரம். **துஞ்சுதல்** - ஒடுங்குதல். **சுரர்கள்** - தேவர்கள். **தளை** - விலங்கு. **சஞ்சிதக் கடல்** - பெருக்கமான பழைய வினைகள்.

40. **சிலவர்** - சிலர். **குலாவி** - விளங்கி. **நெடியோன் குன்று** - திருவேங்கட மலை. **குமரி** - கன்யாகுமரி. **ஆரியந்தான்** - வடமொழிதான். **சங்குலம்** - ஆரவாரச் சண்டை.

41. **அம்புயம்** - தாமரை. **இம்பரில்** - இவ்வுலகில். **உம்பல் முகன்** - கஜமுக கணபதி. **வெணாவலின்** - வெண் நாவல் மரத்தின். **கொம்பு** - கிளை.

42. **பாடை** - பாஷை. **இச்சா** - இச்சை. **மைப்பானல்** - நீலமலர். **மிடற்றார்** - கண்டத்தர். **போதனை** - ஞானம் போதிக்கும். **கைப்போதகம்** - (பத்து வயது ஆனைக் கன்று போல் காட்சி யாகும்) கணபதி. "போதகஸ்து தச வார்ஷஹ" என்பது நிகண்டு. **பிற்பாடு** - பின். **நத்து** - பாஞ்ச சன்யம். **அசி** - வாள். **தரித்தார்** - தாங்கிய திருமால். **தற்போதம்** - தன் முனைப்பு. **வழுத்து** - துதிக்கும்.

43. **புத்தேளிர் துய்க்கும்** - தேவர்கள் உண்ணும். **தீவியச் சுவை** - இனிமையான சுவை. **புதுக்கு** - புதுக்கிய. **பொற் கடலில்** - மதுரையில். **குடவயின்** - மேற்கில் உள்ள. **கிரியில்** - பரங்கிரியில். **சோலை யத் திரியிலே** - பழமுதிர் சோலை மலையில். **கடற்பதியில்** - திருச்செந்தூரில். **முட்டாது** - தடைபடாது. **கைத்தானம் உற்றமலை** - யானை. **கார்** - மேகங்கள். **பல வெற்பு** - பல மலைகளில்.

44. **குப்பாசம்** - சட்டை. **பொறிகட்கு** - ஐம்பொறி கட்கு. **கொட்பு** - சுழற்சி.

**இப் பாச பத்தனை** - இப் பாசத்தில் பற்று வைத்த என்னை. **சாது சற்குரவனார்** - பழநியி லிருந்த பரமயோகி. **தற்காவல்** - தற்காப்பு. **குறு முறுவல்** - புன்னகை. **தப்பான செப்பு** - தவறு பட்ட உரை கூறும்.

45. **ஏய்** - தங்கிய. **தசை** - புலால் மயமான. **பல கசுமாலம்** - பல அருவறுப்பான பொருள்கள். **மேய** - தின்ன. **அனற்ற** - கொளுத்த. **பெருவேதன்** - பிரமன். **மரு** - மணம். **உஞற்றி** - செய்து. **வழு** - குற்றம்.

46. **வாரிதி** - கடல். **அணியே** - அழகாக. **அயன்** - பிரமன். **மால்** - திருமால். **அழற்கிரியின்** - நெருப்பு மலையின். **அணிப் பதியனான்** - அண்ணாமலையில் உதித்தவன். **பத்து அருணகிரி** - அன்புடைய அருணகிரி. **சலராசி** - நீர் நிறை கடல். **வரிப்புலி** - (உடலில் பல) வரிகளை யுடைய புலி. **கிரிடி** - பன்றி. **கனிவாய்** - கொவ்வைக் கனிபோன்ற வாயால். **மறமாதினுக்கு** - வள்ளிக்கு. **கனிவாய்** - கனிந்து பேசுவாய். **பூகம்** - கமுக மரம்.

47. **தமசு** - இருள். **உட்பகை** - அகப்பகை. **முதல்** - வேர். **அலை இல் சல ராசி** - அலையில்லாத கடல். **சமநிலை** - சமாதி நிலை. **மறைவாணனை** - மார்க்கண்டேயரை. **மமகாரம்** - (எல்லாம்) எனதுடைமை என்னும் மமதை.

48. **மலை வில்லான்** - மலை வில்லினன் எனினுமாம். **வைதேகி** - ஜானகி. **மொய்கானம்** - அடர்ந்த தண்டக ஆரண்யம். **பெருமாள்** - திருமால். **எல்லோன்** - சூரியன். **இயக்கமற** - சஞ்சரிப்பு இல்லையாக. **மெய்** - (தன்) உடலை. **மலை** - விந்தகிரியை. **முனிவோன்** - அகத்தியன். **எய்யாது** - வருந்தாதபடி. **வல்** - சூதாடுகருவி போன்ற. **குறவி** - குறவர்குல வள்ளி. **வரி** - கருவரி செவ்வரி படர்ந்த.

49. **ஆரியனாய்** - குருவாய்; குதிரைச் சேவகனாய் எனினுமாம். **வடபாடை** - வடமொழி. **பா** - ஆநந்த லகரி, சௌந்தர்ய லகரி. **வீரையர்கோன்** - கவிராச பண்டிதர். **மகளாய்** - அன்ன பூரணியாய்; அறிக. **கணி பாவலன்** - மதிப்புள்ள திருமழிசை யாழ்வார்; ஆழ்வார் சீடரான கணிகண்ணன் எனும் பாகவதருமாம். **கடுவாய்** - விஷவாய். **பை கஞ்சுகி** - ஆயிரம் தலை யாதிசேடன். **கனபாயல்** - பெரிய படுக்கை. **பரி** - மயில். **பகவா** - ஆறுபண்புள அத்தா.

50. **முதுக்குறைவு** - பேரறிவு. **விஞ்சு** - பெருகிய. **மனக்கு இனியாள்** - கலைமகள். **மிழற்றும்** - இசைக்கும். **மொஞ்சி** - தாய் முலைப்பால்.

51. **புடவி** - நிலவுலகை. **புயல் படுக்கும்** - மேகங்கள் தவழும். **கிரியை** - விந்த மலையை. **பொன் கிரி** - கயிலை மலை. **கடாம் வரை** - மதநீர் பெருக்கும் மலைகள் போன்ற யானைகள். **குவடு** - சிகரம். **அரக்கன்** - இராவணன். **அரவணைக்கண்** - சேஷசயனத்தில். **குடமுனி** - அகத்தியர்.

52. **உவவேம்** - விரும்பேம். **கொப்பு** - (யானைத்) தந்தம். **இக்கு** - கரும்பு. **கட்குள்** - கணுவிற்குள். **கவரேம்** - வலிந்து கைப்படுத்த மாட்டேம். **கைக்கிரி** - ஐராவதம். **மடப்பிடி** - தேவயானை. **கழி** - கரும்பு.

53. **பெட்பு** - விருப்பு. **கீர்** - மொழி.

54. **ஆல நிழல்** - கல்லால மரத்தின் நிழலில். **ஆரணமும்** - வேதங்களும். **தெருளே** - தெளிவே. **மானும்** - போன்றிருக்கும். **கழை** - கரும்பு. **குழகா** - இளையோனே. **கோலம்** - திருமேனி. **கிரிகுமாரி** - பர்வத ராஜ குமாரி. **கோமள கலாபம்** - அழகிய தோகை. **இதண்** - பரண். **புயனே** - தோளனே. **மூலன்** - திரு மூலர். **முறுவல்** - புன்னகை.

55. **வலாரி மணி** - இந்திர நீலமணி. **குஞ்சி** - குடுமி. **விஞ்ச** - மிகுதிப்பட. **நிலா** - சந்திரிகை. **உததி** - கடல். **முறுவல்** - புன்னகை. **பராவு சுரர்** - வழிபடும் வானோர். **மிளிர** - பிரகாசிக்க. **சிகி** - மயில். **செந்துகிர்க் கால்** - சிவந்த பவள

நிறமான கால்கள். சுலாவு - சுற்றிச் சுழற்றும். சலாம் - வணக்கம்; திசைச்சொல்.

56. முராரி - திருமால். புவி யிடா - பூமியைப் பிளந்து. படி இல் மெய்ப் படிவம் - ஒப்பிலாத் திருவுருவம். தாயினிலை மேய் - செவிலியின் தன்மையை ஏறிட்டுக் கொண்டு.

57. மருமான் - புதல்வன். மலையாசலம் - பொதிகை மலை. சூல் நாறல் அற்று - கருப்ப வாசனை தோன்றுதல் இல்லாதபடி. வான் - வீடு பேறு. வேள் - (முத்தி மங்கையில்) மோகம் மூட்டுமவன்.

58. நறா - தேன். உருள் மரா - உருளை போலும் மரா மலர்; இது கடம்பெனவும் பெயர் பெறும்; "உருள் பூந் தண்தார் புரளும் மார்பினன்" என்பது திருமுருகாற்றுப்படை. நுதல் - நெற்றி. மறாமல் - மறுக்காமல். துறாது - நெருக்காமல்.

59. என் அவாவால் - என பேராசையால். வாவுறு - தாவும். ஏன் அவாய் வருதி - ஏன் விரும்பி நீயே வருகிறாய். உன்ன ஆவிக்குள் வருவாய் - நினைதொறும் உயிர்க்குள் விளங்குகிறாய். உன்னுவார்க்கு - உணர்பவர்க்கு; "உணர்ந்தார்க்கு உணர்வரியோன்" என்பது, இங்கு உணர்த்தப் பெற்றது. 6. முன்ன ஆயாது - பதிந்து நினைந்து பாராமல். சொன்னவா செய்த பெருமான் - (திருமழிசை யாழ்வார்) சொன்ன வண்ணம் செய்த (காஞ்சிபுரப்) பெருமாள்.

60. நாலு முகமா - தொங்கு முகமாக. வாவியினில் - (சரவணப்) பொய்கையில். உடுமகளிர் - கார்த்திகை மாதர். அசுரர் வேரை - அவுணர் சமூகத்தை. சொன்ன ஆறு ஆன - நினைத்தபடி செயலை விளைவிக்கிற; அல்லது பொன் கொழிக்கும் ஆறான எனினுமாம்; சொன்னம் - பொன்.

61. மிடல் - மிடுக்கு; ஆற்றல். அவுடதம் - மருந்து. உகக்கடை - யுக இறுதி. அகக் கண் - உள்ளக் கண். பரிதி - சூரியன். அடல் - கொல்லும் குணம். மிதவை - படகு. அரணம் - மதில். தடி - மின்னல். பத்மபதன் - திருவடித் தாமரையான். சிவசாமி - சிவபிரான்.

62. நுதல் கணவர் - நெற்றிக் கண்ணர். தழை ஆல் - தழைத்த கல்லால். சதுர் - நான்கு. சாகை - கிளைகள்; உபநிடதங்கள். மழவாய் - இளஞ் சேயாய். வாவியில் - சரவணப் பொய்கையில். பதுமமலர் ஏணை - கமலப் பாயல். அருத்தி - அன்பு. இகல் - பகை. எற்றும் - மோதும். எதிர - எதிரேறிச் செல்ல. விப்பிரர்கள் - அந்தணர்கள்.

63. தந்தி - யானை. மருப்பில் இழை - தந்தத்தால் செய்த. சிகை - குடுமி. சலாகை - (எழுது) கோல். தாழ - (அதிகம்) தொங்க. துகில் - உடை. பட்டிகை - அரைக் கச்சை. வடு - தழும்பு. மந்திப்பிடி - குரங்குப்பிடி.

64. முதுமை - மூப்பு. மொய்ம்பு - மார்பு. நொடி - திருஷ்டி கழிக்கும் நடை. வன்பால் - முரட்டுத் தனத்தால். புரக்கும் - காக்கும்.

65. பம்பு - நிறைவு. பூதி - செல்வம்; விபூதி. மேவல் - வருதல். பாங்காய் - அழகாய். பானல் ஒள் வாய் - நீலோற்பல மலர்போல் ஒளி மிகுந்தவாய்; பால் மணம் கமழும் அழகிய வாய். பரிவு - அன்பு. உம்பரார் - வானவர். இம்பரொடு - இவ் வுலகரொடு. இசை கெழு - புகழ் பொருந்திய. ஓவாது - இடையறாது. ஒள் - ஒளி. மானம் - விமானம். சிரோ ரத்னம் - தலையணி; சிறந்த தன்மை. பேறு - பாக்கியம். வம்பு - மணம். முரல் - ஒலிக்கும்.

66. மேற்பால் - உயர்குலத்தில்; மேற்குத் திசையில். கலை - கல்வி; பதினாறு கலை. ஒளி - புகழ்; பிரகாசம். மறைவாய் - இறப்பாய்; அமாவாசை யாவாய். மேதினியர் - உலகர். குறை மதியன் - அறிவு குறைந்தவன்; தேய்பிறை யானவன். கீழ்ப்பால் - கீழ்க்குலத்தில்; கிழக்குத் திசையில். நாற்பால்

இருப்பவர் - நான்கு திசை மக்கள். கலைச் செல்வன் - கல்விச் செல்வன்; கலைகளாகிய செல்வம் உடையவன். அல்லோன் - தீயோன்; இரவரசன். நாரியர் - மாதர். கரிய மால் பால் - கரிய மயக்க மனம்; கரிய திருமாலிடத்தில்.

67. அம்பு இட்ட - நீர் இரைத்த; அம்பு போன்ற. அகிலமும் - (உலக) முழுவதும். தண்ணளி - குளிர்ந்த அருள். வம்பிட்டு - பயனிலாது. முயலகனாய் - முயல் களங்கம் உடையவனாய். மறுக்கமுற்று - மனக் கலக்கம் கொண்டு. வள்ளல் - சிவபிரான். கும்பிட்டு - முச்சடங்கி. குரிசில் - திருஞான சம்பந்தர். செம்பிட்ட - செம்பினாலான. இஞ்சி - மதில்.

68. இருவினை - (நல்வினை, தீவினையாகிய) இரு வினைகள். திரளினால் - திரட்சியால். களங்குற்று - மாசு அடைந்து. மறுகல் - வருந்துதல். கரும்பின் - கரும்பான சிவத்தின். பதம் - திருவடி. ஒளிருவார் - பிரகாசிப்பர். சடம் - அறிவின்மை. சித்துருவர் - ஞான மேனியர். எண் - அளவு. இந்துவே - சந்திரா. இகபரம் - இம்மை மறுமை.

69. இவர்ந்து - ஊர்ந்து. சோமன் - சந்திரன்; சிவன். தருணம் - பருவம். மேடம் - ஆடு; மேட ராசி. புலவர் - கற்றோர்; தேவர்கள். தெருள் - தெளிவு. ஆரணம் - வேதம்.

70. தேரா - தெளிவிலாத. அந்தணன் - பிராமணன்; குளிர்ச்சி யுடையவன். கள்ளன் - திருடன்; கரியோன். இரவு - பிச்சை; இராத்திரி.

71. வெள்ளாளன் - வேளாளன்; சந்திரன். வேளாண்மை - மன்மத விரம்; உழவு தொழில். கல்லாரக் கயவர் - குளத்தில் வாழும் நீலோற்பலம்; கல்வி பயிலாத கீழ் மக்கள். வண்டர் - குற்றமுடையோர்; வண்டுகள். காசு - களங்கம். பணம். ஆசை - திசைகள்; அவா. நல்லோர்கள் - மகளிர்; சான்றோர். தாரா இனம் - ஈயாதார் கூட்டம்; நட்சத்திரக் கூட்டம். இரவு - இராத்திரி; பிட்சை.

72. கலையன் - கலைகள் பயின்றவன்; கலைகளை யுடையவன். செருக்கலை - கர்வம் கொள்ளாதே. எச்சிற் கலையன் - எச்சில் பட்ட கலைகளை யுடையவன்; எச்சில் இலைகளில் கிடைத்தவைகளை உண்பவன். பொங்கலையே - பொங்கி வழியாதே. நச்சி - விரும்பி. க(ல்)லையும் - கலைகளையும். திரிகலையோ - திரிபவன் அல்லவோ. தமிழ்க் கலையன் - அகத்தியன். இச் சிக்கலை - இத்துணைச் சிக்கலான துன்பங்களை.

73. சுறவு ஏறு கொடி வேந்தன் - மீனக் கொடி படைத்த மன்மதன். சுறவு ஏறு கொடி வேந்தன் - மீனக் கொடியுடைய கூன்பாண்டியர். சுரமும் - வெப்பு நோயும். பவமும் - பிறவி நோயும். உற்ற கணம் - அடைந்த மாத்திரத்தில்; அடைந்த நட்சத்திரங்கள். அந்தரத்திலே - ஆதாரமிலா நிலத்தில்; வானத்தில். கரும்பொன்- இரும்பு. அற ஏறு - தரும விடை. சுரர் அடல் ஏறு - தேவர் சிங்கம் ஆகிய சிவபிரான்; "சிவனே தேவர் சிங்கமே" என்றார் பிறரும்.

74. சுவற - வற்ற. பொடிய - தூளாக. அழலினெழு கைகள் - அக்கினி; பகவானது ஏழு கைகள். வெய்தாக - விரைவாக. அடுவான் - வெட்டுவான். இருவர் - பிரம விஷ்ணுக்கள். குழவி - இளஞ்சேய். குழகன் - சிவபிரான். குதிரை யனல் - வடவா முகாக்கினி. பிணி முகம் - முருகன் வாகனமான யானை. கவளம் - ஒரு வாய் உணவு. நாய்க்குடை - காளான்; இது ஆம்பி எனப் பெறும்.

75. கணம் - கூட்டம். கடி - காவல். கன்னி - அழியாத கட்டுக் கோப்பு. கலிக்கும் - மிடுக்குடன் ஆரவாரம் செய்யும். மகரம் - சுறா மீன். கஞலி - நிறைந்து. பேரகழ் - பெரிய அகழி. பிணங்கி - மாறுபட்டு. பரி - ஊர்தியான கடா. பிறங்கல் - மலை.

76. **அனந்த** - அளவிலாத. **குழு** - கூட்டம். **அடிகேள்** - ஆதிமூலனே; விளியுருபு ஏற்ற பெயர். **அரங்கு** - சபை.

77. **காலைப் பருதி** - உதய சூரியன். **கதிர்** - ஒளிக்கற்றை. **கோலம்** - (இயற்கையும்) செயற்கையுமான பேரழகு. **பாலில்** - பால் போல். **பறவை** - சந்திர முகி எனும் பறவை. **புரந்திடுவேம்** - ஏற்றுப் போற்றுவம். **ஆலை** - கரும்பாலை.

78. **மண் தின் கணை** - மண்ணுண்ட (திருமாலாகிய) பாணம். **கணக்கை** - வகையை. **பல் இளித்து நின்றான்** - சிரித்து நின்ற சிவன். **புலவன்** - கவிராஜ பண்டிதர். **இனிது அட்டு இட்டாள்** - இனிதாகப் பாகம் செய்து பரிமாறிய அன்னபூரணி. **மடவார்** - கோபிகைகள். **கோமாளிக் கூத்தன்** - கண்ணன்.

79. **எம் ஆய்** - எம் அன்னை. **தம் ஆதரவால்** - தமது இயற்கைப் பேரன்பால். **குறும்பர்** - குறும்பு செய்யும் சிறுவர்; மலைவாணராகிய குறவர்.

80. **அன்னம்** - சோறு; அன்னப் பறவை. **ஐயம்** - பிட்சை. **மன்னன்** - கண்ணன். **பருப்பை** - பருப்பினை; பெருமையை. **உன்மத்தன்** - பித்துப் பிடித்தோன். **வாழ்வான்** - வாழும் சிவபிரான். **பலகாரம்** - சிற்றுண்டி.

81. **மலை** - இமயமலை. **வாரிமகள்** - திருமகள். **பேரா** - அழியாத. **சிலையை** - மலையை. **சிறை கொய்** - இறகுகளை அறுத்த. **கொடியோன்** - இந்திரன். **தாளாண்மை** - முயற்சி; திருவடி வீரம். **அலகில்** - அளவில்லாத.

82. **விபுதர்** - தேவர்கள். **போது** - மலர். **போதம்** - தெளிவு. **புந்தி** - உள்ளம். **கோது இல்** - குற்றம் இல்லாத.

83. **கரம்** - கைகள். **சரணம்** - அடைக்கலம் அளிக்கும் திருவடிகள். **பங்கம்** - பழுது. **பண்ணை** - மருதநிலம். **பயத்தால்** - பயனால்.

84. **உந்தை** - உம் தந்தையான சிவபிரான். **பாவை** - (சடங்கவி சிவாசாரியார்) மகள். **ஒருகால்** - ஒரு சமயம். **பவத்தால்** - பாவத்தால். **உறுத்த** - (கல்லும் மண்ணும் பொத்தி) வருத்த. **பாவை பலர்க்கு மணம்** - பொம்மைக் கலியாணம்.

85. **பல நெறி** - பல சமய வழிகள். **வகுத்து** - வகைப்படுத்தி. **குயிற்றி** - இயற்றி. **கோணை** - வளைவு.

86. **இடும்பை** - துன்பம். **மடவோர்** - அறியாமையர். **மலம்** - அழுக்கு. **புரிகம்** - செய்வோம்.

87. **நயப்புறு** - விருப்புடைய. **கயக் குழு** - கீழோர் கூட்டம். **மல இருள்** - ஆணவ இருள். **அரண்** - மதில். **கடம்** - மதநீர். **கவுள்** - கன்னம். **நிகளம்** - விலங்கு. **துகள்** - பொடி. **பொருப்பு** - (மலை போன்ற) கணபதி யானை. **உழிஞை** - உழிஞை மாலை. **பொருமாறு** - மோதுமாறு. **நொச்சி** - நொச்சிப்பூ. **பொறி** - (மதில் காக்கும்) யந்திரங்கள். **சிவத்தரு** - சிவக் கற்பகம்.

88. **உறும் அமுது** - உள்ள அமுதம். **பொறியரவு** - ஐம்பொறிப் பாம்புகள். **உரப்பி** - அதட்டி. **உறை** - மழைத்துளி. **மரு நிலம்** - களர் நிலம். **மசரதம்** - கானல் நீர். **வறள** - வற்ற. **அற்பு** - அன்பு. **நிரைத்து** - வரிசைப்பட வைத்து. **உரிய சமயம்** - தக்க பருவம்; வாய்மைச் சமயமுமாம்.

89. **உகம் உகம்** - யுகந்தோறும். **உமை** - உமாதேவி. **படியும்** - நீராடும். **பகவதி** - பரமேஸ்வரி. **தளை** - பந்தம். **பதவலி** - திருவடி ஆற்றல். **பொதிந்த நிதி** - சேம நிதி. **பொலங்கள்** - அழகுகள். **மதுகை** - ஆற்றல். **செகதலம்** - உலகம்.

90. **பொங்கு** - மிக்க. **கருமணி** - நீலமணி. **திரள் அனைய** - கூட்டம் போன்ற. **குஞ்சி** - குடுமி. **களம்** - கழுத்து. **பருதி** - சூரியன். **ஐராவதம்** - தேவலோக வெள்ளை யானை. **சிங்கல் அற** - சிக்கலற; குறை இலாதபடி. **மணி**

- நவமணி. **சீரா** - சிறந்த காமதேனு. **பரிச்சிகி** - குதிரையாகிய மயில். **அமுது உததி** - பாற்கடல்.

91. **ஒண் பொருள்** - புனித செல்வம். **மாதவர்** - சிறந்த தவசிகள். கனிவாய் நுகர அமுது தந்து எனக் கூட்டுக. **ஏவல்** - பணி. **தோம்** - குற்றம். **நிரயம்** - நரகம். **தொந்த தொந்தங்கள்** - பாதிக்கும் பந்தங்கள். **சந்ததம்** - எந்நாளும். **அவா** - ஆசை. **ஆறு பகை** - காம, குரோத, லோப, மோக, மாற்சர்யங்கள். **மிதித்தி** - மிதித்து விடு. **தரி** - தாங்கு.

92. **கடுக்கைத் தொடை** - கொன்றை மாலை. **அளி** - வண்டு. **தடினி** - நதி. **திரை** - அலை. **கலைமான் மறி** - மடங்கி நிமிர்ந்த கலைமான். **கனல்** - மழு. **உபய பதம்**. இரு திருவடிகள். **கொட்டு** - தாளம். **சுரர்** - தேவர்கள். **முடுக்கி** - விரைந்து.

93. **மதியம்** - சந்திரன்; **அம்** - பெயர் விகுதி. **பொன்றா** - கெடாத.

94. **தழங்கும்** - ஒலிக்கும். **முழவம்** - மத்தளம் எனும் பறை. **அரங்கம்** - சபை. **பண்ணை** - மகளிர் விளையாடும் இடம் கூட்டம். **அகவல்** - அகவலிசை. **மழைக் கலிப்பு** - மேகங்களின் மொய்ப்பு. **கா** - சோலை. **புள்** - பறவை.

95. **அவம்** - பாவம். **அடவி** - காடு. **புலன்** - ஐம்புலன். **அறவே** - முழுதும். **பவமாயம்** - மாயாப் பிறவி. **மழுகா** - மழுங்காத. **உறுதி** - வைராக்யம். **பரித்து** - தாங்கி. **புடை** - பக்கம். **மணி மன்றுள்** - இரத்தின சபையுள். **ராஜ ராசேகரன்** - மன்னர் மன்னன். **பொன்றாது** - கெடாதபடி.

96. **இது** - இப்பிறவிப் பிணி. **பக்குவம்** - பரிபாக காலம். **பரிவினால்** - அன்பொடு. **மருத்துப் பை** - மருந்து வைத்திருக்கும் பை; விபூதிப்பை. **பொடி** - பஸ்மம்; திருநீறு. **மணி** - ஜபமாலை. **ஆறெழுத்து** - சடக்கரம்.

97. **பவ்வம்** - (பாற்) கடல். **துரங்கம்** - குதிரை. **இரதத்தன்** - இந்திரன். **ஓதிமத் தேரவன்** - அன்ன வாகனப் பிரமன். **பறவை** - கருடன். **கடி** - காவல். **மனோரதம்** - மன விருப்பம். **சுதா** - மகனே. **செவ்வி** - அழகு. **முன்றில்** - திருமுற்றம்.

98. **கன்றி** - பகைத்து. **புதைத்து** - மூடி மறைத்து. **படலம்** - திரை. **வாள்** - வாள்படை; ஒளி. **துரந்து** - விரட்டி. **அடுதிறல்** - அழிக்கும் ஆற்றல். **கதிர்** - சூரியன். **மகன்** - பாநுகோபன். **உடல் பனித்து** - உடல் நடுங்கி. **தென்திசை** - யமபுரம்.

99. **சூர் மகளிர்** - அழகு காட்டிப் பின் அச்சுறுத்தும் வன தேவதைகள். **பாசாடவி** - பாசமாகிய அடவி; **அடவி** - அடர்ந்த காடு. **உழுவை** - புலி. **வழுவை** - யானை. **விருகம்** - விலங்குகள். **புல்** - அல்பம். **தூறு** - புதர்கள். **கல்லி** - பெயர்த்து. **பட்டி** - ஆள்வார் இல்லாத மாடு.

100. **தவாதன** - அழியாதன. **தாஇல்** - குற்றமிலாத. **தமசு** - இருள். **நிவந்த ஆதரவால்** - உயர்ந்த காதலால். **அகக் கோயிலில்** - மனக்கோயிலில். **முயக்கம்** - கூட்டம். **உண்மை ஞான இன்பு** - சச்சிதாநந்தம்.

101. **அளி** - கருணை. **தோளணி** - வாகுவலயம்.

102. **பரந்த** - பரவிய. **பண்பு** - தன்மை. **புன்பணி** - அற்பமான வேலை. **நிரந்த** - வரிசைப்பட வந்த. **நிரப்பு** - வறுமை. **உரம் தவாத** - வலி கெடாத.

103. **அலகிலா** - அளவு இல்லாத. **பல்கி** - நிறைந்து. **மிடி** - வறுமை.

104. **மலைவில்லியார்** - சிவனார். **நுதல்** - நெற்றி. **பசும் கொடி** - பார்வதி. **தொண்டற்கு** - அர்ச்சுனனுக்கு. **நாரணன்** - கண்ணன். **முனிவரன்** - அகத்தியர். **இபமகட்கு** - தேவயானைக்கு. **மான் மகட்கு** - வள்ளியார்க்கு. **உம்பல்** - யானை. **சோதர** - தம்பியே.

